# அபிராமி பட்டரின் பதிகங்கள்

## (மூலமும், உரையும்)




உரை ஆசிரியர்

அபிராமிதாஸன் மீனாட்சிசுந்தரம் மோகன்

# அபிராமி பட்டரின் பதிகங்கள்

(மூலமும், உரையும்)

உரை ஆசிரியர்

**அபிராமிதாஸன்**

**மீனாட்சிசுந்தரம் மோகன்**

உ

அன்னை அபிராமி துணை

## பொருளடக்கம்

உ
அன்னை அபிராமி துணை

## முன்னுரை

இந்தத் தொகுப்பில் அபிராமி பட்டர் அருளிய "திருக்கடவூர் கள்ள விநாயகர் பதிகம், அபிராமி அம்மை பதிகங்கள் [1 முதல் 3 வரை] மற்றும் கால ஸம்ஹார மூர்த்தி பதிகம் தரப்பட்டுள்ளன.

இந்நூலின் உரையாசிரியர் திரு. "அபிராமி" மோகன் முன்னமே "அபிராமி அந்தாதி" என்னும் அபிராமி பட்டரின் நூறு பாட்டுகளுக்கு விரிவாகவும், விளக்கமாகவும் எழுதியுள்ள உரை பிரசுரமாகி இருக்கிறது. அதில் விளக்கியது போல், இந்த நூலிலும் 53 பாடல்களுக்கு, திரு. மோகன் அவர்கள் அழகாகவும் மற்றும் ஆழமான கருத்துக்கள் உள்ளடக்கியதுமான நல்லதோர் உரையை அளித்திருக்கின்றார். படிக்கப் படிக்க தெவிட்டாததும், திரும்பத் திரும்பப் படிக்கத் தூண்டுவதுமான ஒரு உரையாக இது அமைந்திருக்கின்றது என்று சொன்னால், அது மிகையாகாது. அபிராமி அம்மையின்பால் உள்ள இவருடைய பக்தி இதில் தெள்ளத் தெளிவாக நிலவுகிறது.

ஸனாதன தர்ம [இந்து சமய]த்தில் எத்தனையோ கடவுள்களைப் பற்றி கூறி இருந்த போதிலும், உண்மை யிலே ஒரே ஒரு சக்தி தான் உள்ளது என்பது, "தேவீ பாகவதம்" என்ற புராணத்திலிருந்தும், மார்க்கண்டேய புராணத்தில் உள்ள "தேவீ மாஹாத்ம்யம்" [துர்கா சப்தசதி] என்ற பகுதியிலிருந்தும், ஆதி ஶங்கரர் இயற்றிய "ஸௌந்தர்யலஹரீ" என்ற காப்பியத்திலிருந்தும், மற்ற இதர துதிகளிலிருந்தும் அறியலாம். இதை "एकं सत् विप्राः बहुधा वदन्ति" என்ற சொற்றொடரில் இருந்து தெரிந்து கொள்ளலாம். ஆக, எந்த கடவுளை வழிபட்டாலும், அது

முடிவில் அம்பாளைத் தான் போய் அடையும் என்பதால்தான் சக்தி வழிபாடு முக்கியமாக கருதப்படுகிறது. ஆதி ஶங்கரரும் இதையே "ஸௌந்தர்யலஹரீ"யில் (25)

*த்ரயாணாம் தேவானாம் த்ரிகுண - ஜநிதானாம் தவ சிவே*
*பவேத் பூஜா பூஜா தவசரணயோர் - யா விரசிதா: |*
*ததா ஹி த்வத் பாதோத்வஹன - மணிபீடஸ்ய நிகடே*
*ஸ்திதா ஹ்யேதே சச்வன் - முகுலித - கரோத்தம்ஸ - மகுடா: ||*

என்ற ஸ்லோகம் மூலமாக வெளிப்படுத்துகிறார்.

தேவீ மாஹாத்ம்யம் என்னும் மஹாமாயா ஸப்தசதி என்ற ஸ்தோத்திரத்தில், அம்பாளே சொல்லும் கூற்றை கவனித்தால், எல்லா சக்தியும் அவளுடையதே அன்றி வேறு இல்லை என்றும், அவற்றை அவளுடைய விபூதி என்றும் தெரிந்து கொள்ளலாம்.

*ஏகைவாஹம் ஜகத்யத்ர த்விதீயா கா மமாபரா* [10-3(a)]

*அஹம் விபூத்யா பஹுரூபி - ரிஹ ரூபைர் - யதாஸ்திதா |*
*தத் ஸம்ஹ்ருதம் மயைகைவ திஷ்டாம்யாஜௌ ஸ்திரோ பவ ||* [10-5]

திரு. மோகன் அவர்கள் தெளிவான முறையில் இந்தப் பதிகங்களுக்கு விளக்க உரை எழுதி இருக்கின்றார். தேவைப்பட்ட இடங்களில், வார்த்தைகளுக்கும் பொருள் கொடுத்து ஐயம் வராத வண்ணம் உதவி இருக்கின்றார். சமஸ்கிருதத்தில் "மந்திர சாஸ்திரம்" என்று சொல்லும் அளவுக்கு இந்த பாடல்கள் அமைந்திருக்கின்றதால், ஸ்ரீ வித்யா உபாஸனை இல்லாமல், இம்மாதிரியான விளக்கங்களோ, குறிப்புகளோ தர இயலாது. முக்கியமாக சில இடங்களை எடுத்துக்காட்டாக, கீழே காணலாம்:–

1. கள்ள விநாயகர் பதிகத்தில், எப்படி இந்த பெயர் விநாயகருக்கு வந்தது என்பதன் வரலாறு, சுவாரஸ்ய மாகவும், கருத்தாழத்துடனும் விளக்கப்பட்டிருப்பது,

2. பிள்ளையாரின் முன் நின்று, பக்தர்கள் நெற்றி யிலே குட்டிக் கொள்வதன் தத்துவத்தை நேர்த்தி யாகவும், விஞ்ஞான முறையிலும் விளக்கி இருப்பது,

3. "பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க" என்று வாழ்த்துவதன் முழுப் பொருளையும், ஏன் அபிராமி பட்டர் இப்படி அம்மையிடம் வேண்டுகிறார் என்பதையும் துல்லியமாக எடுத்துரைத்து இருப்பது.

4. ஆதி ஶங்கரர் ஸௌந்தர்யலஹரீயில் [ஸ்லோகம் 56] அம்பாளின் விழிகளின் அழகையும், சௌபாக்கியத்தையும் கவி நயத்துடன் வர்ணிப்பதை எப்படி அபிராம பட்டரும், சிறந்த முறையிலே கையாண்டிருக்கிறார் என்பதை விளக்கி இருப்பது,

5. அம்பாளின் வர்ணனையில் "ஸ்வரூபம்" என்ற சொல்லுக்கு, பொதுவாக உள்ள பொருளும், ஆன்மீக நோக்கில் உள்ள பொருளும் [அதாவது, ஸகுண மற்றும் நிர்குண பிரம்ம உபாஸனை] கொடுத்திருப்பது, மேலெழுந்தவாரியாக, ஒன்றுக் கொன்று முரணாக இருந்தாலும், உட்பொருளை வெளிக் கொணர்வதற்கு, திருமூலரின் திருமந்திரத்திலிருந்து மேற்கோள் தரப்பட்டுள்ளது. இதையே ஆதி ஶங்கரரும் கீழ்க்கண்ட வாறு மொழிகிறார்:–

रूपं रूपविवर्जितस्य भवतो ध्यानेन यत्कल्पितम्
स्तुत्याऽनिर्वचनीयताऽखिलगुरो दूरीकृता यन्मया ।
व्यापित्वं च निराकृतं यद्भगवतो तीर्थयात्रादिना
क्षन्तव्यं जगदीश विकलता दोषत्रयं मत्कृतम् ।।

6. அபிராமி பட்டர் அம்மையிடம் சேய் எப்படி தாயிடம் இருக்குமோ அல்லது முறையிடுமோ, அதேபோல், செய்யுட்கள் மூலம் தமது இயலாமையையும், ஸர்வ வல்லமை படைத்த அம்மை அல்லாமல் தமக்கு வேறு கதி இல்லை என்பதையும், கெஞ்சிக் கேட்பதை மனதைத் தொடும் வகையிலே சித்தரிப்பது,

7. அபிராமி அம்மை பதிகம் மூன்றாம் பதிகத்தில், அருணகிரிநாதர் முருகப் பெருமானை வணங்கும்

அதே முறையில், பட்டரும் கையாண்டிருக்கின்றார் என்பதை விரிவாக எடுத்துக் கூறியுள்ளது. இதன் சூட்சுமம் அத்வைத சித்தாந்தம் எனலாம்.

நன்றாக ஆராய்ச்சி செய்து, அம்பாளைப் பற்றி பல இடங்களிலே வரும் செய்திகளை சேகரித்து, அவற்றை தர வேண்டிய இடங்களில் தொகுத்துத் தந்திருப்பது, நூல் ஆசிரியரின் திறமையைக் காட்டுகிறது. முக்கியமாக, ஸௌந்தர்யலஹரீ, த்ரிசதி, சப்தசதி, மஹாபாரதம், ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம், பகவத் கீதை, திருக்குறள் என்ற நூற்களிலிருந்தும், வள்ளலார், இராமகிருஷ்ண பரமஹம்சர், மாணிக்கவாசகர், அப்பர், திருமூலர், அருணகிரி நாதர், ஒட்டக்கூத்தர் என்ற பல சான்றோர்கள் கூற்றுகளி லிருந்தும், மேற்கோள்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

இந்நூல் வாயிலாக திரு. மோகன் அவர்கள் தேவீ உபாஸகர்களுக்கு ஓர் அரிய, பெரிய தொண்டை ஆற்றி இருக்கிறார். இந்த முயற்சியினால், அவர் பக்தர்களின் பாராட்டுக்கு உரியவர் என்பது சொல்லத் தேவை இல்லை. அம்மையின் அருள் அவருக்கு பெரிய அளவிலே இருக்கின்றது என்பது கீழே தந்திருக்கின்ற கீதையில் உள்ள செய்யுளினால் தெளிவாகிறது.

*ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி$_3$ ஸந்நி விஷ்டோ*
*மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநம போஹநம் ச |*
*வேதை$_3$ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்$_3$யோ*
*வேதா$_3$ந்தக்ருத்$_3$ வேதவிதே$_3$வ சாஹம் ||* (15.15)

சென்னை
28-12-2008

சி. ல. இராமகிருஷ்ணன்

# ஆசிரியர் உரை

குருவருள் இல்லையேல் திருவருள் இல்லை.

*"ஸ்ரீ குரு: ஸர்வகாரண பூதா-சக்தி:"* (பாவனோபநிஷத்து)

ஸ்ரீ குருவே அனைத்திற்கும் காரணமாக விளங்கும் சக்தி. ஸ்ரீ வித்யா பரம்பரா குருமண்டலத்திற்கு இந்த நூலை சமர்ப்பிக்கிறேன்.

அன்னை அபிராமியின் அருளால் அடியேன் அபிராமி அந்தாதிக்கு ஒரு விளக்கவுரை, "அபிராமியும் லலிதாவும்" என்ற தலைப்பில் எழுதிய நூல் 2007–ம் ஆண்டு வெளியிடப் பட்டு நல்ல வரவேற்பும் பெற்றது. சில அன்பர்கள் அடியேன் அபிராமி பட்டர் அருளிய பதிகங்களுக்கும் விளக்கவுரை எழுத வேண்டும் என்று அன்புக் கட்டளை விடுத்தனர். அவர்கள் கட்டளையை அன்னை அபிராமியின் ஆணையாகக் கருதி இந்த தெய்வீகப் பணியில் ஈடுபட்டேன்.

நாயிற் கடையேனான என்னையும் ஒரு மனிதனாக வாழ வைத்துக் கொண்டிருக்கும் என் குருநாதர் காவசேரி ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ K.H. கிருஷ்ணன் ஸார் அவர்கள் என்னை ஊக்குவித்து, உறுதுணையாக நின்று, உன்னத அறிவுரைகள் வழங்கி, அடியேன் இந்த தெய்வீகப் பணியை சிறப்புடன் செய்வதற்கு ஊன்று கோலாய் நின்றார். அவர் பாதங்களில் சரண் அடைகிறேன்.

இந்நூலில் கள்ள விநாயகர் பதிகம், அபிராமி அம்மை பதிகங்கள் [மூன்று], கால ஸம்ஹார மூர்த்தி பதிகம் ஆகிய ஐந்து பதிகங்கள் அடங்கியுள்ளன. அபிராமி அம்மை மூன்றாவது பதிகம் தவத்திரு. ஸாதுராம் ஸ்வாமிகளும், அவரது தமையனார் "அருள் இசைமணி" திரு. ஸ்ரீ.வே. ஸுப்ரம்மண்யன் அவர்களும் தொகுத்தளித்த, "திருக்கடவூர்ப் ப்ரபந்தத் திரட்டு" என்ற நூலை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டது. அவர்களுக்கு அடியேன் நன்றி

தெரிவிக்கின்றேன். இது பற்றிய விவரமான குறிப்பை அபிராமி அம்மை மூன்றாவது பதிகத்தில் காணலாம்.

**சிறப்பாம்சம் :** அபிராமி அம்மையின் மூன்று பதிகங் களையும் 'க' என்ற எழுத்தில் ஆரம்பிக்கிறார் அபிராமி பட்டர். 'க'—ஒன்று [முதலாவது] எண்ணின் குறி. ஒளியையும் குறிக்கும். காந்தாரம் [சரிகமபதநி] ஆகிய கைக்கிளை இசையின் எழுத்து.

ஆதிசங்கரர் இயற்றிய "சிவானந்த லஹரீ" என்னும் ஸ்தோத்திர நூலும் 'க' என்ற எழுத்தில் தொடங்குகிறது. [கலாப்யாம்] அன்னை ஸ்ரீ லலிதாதேவியும், காமேசுவரரும் சேர்ந்து இயற்றிய ஸ்ரீ லலிதா த்ரிசதீயும் 'க' என்ற அட்சரத்தில் ஆரம்பிப்பது பரம மங்களத்தை சூசிப்பிக்கிறது. மேலும் 'க' என்பது தேவியின் பஞ்சதசாக்ஷரீ மந்திரத்தின் முதல் எழுத்து. அபிராமி பட்டர் – அன்னை அருள்பெற்ற ஜீவன் முக்தர் என்பது நிருபணமாகிறது அன்றோ!

இந்நூலுக்கு முன்னுரை எழுதிய டாக்டர் ஸ்ரீ சி.ல. இராம கிருஷ்ணன் அவர்கள் எளிமைக்கும், இனிமைக்கும், தன்னடக்கத்திற்கும், இலக்கணமாய் வாழ்ந்து கொண் டிருக்கும் உன்னத புருஷர். பல மொழிகளில் தேர்ச்சி பெற்றவர். தினமும் தேவீ மாஹாத்ம்யம் பாராயணம் செய்பவர். வேத வேதாந்த சாஸ்திர இதிஹாஸ காவ்ய புராணங்களில் தேர்ச்சி பெற்றவரும், சிறந்த ஆராய்ச்சியாளரும் ஆவர். எவ்வளவோ அலுவல்களுக்கு இடையிலும், இந்நூலை எழுத்து விடாது படித்து, உற்சாகத்துடன் முன்னுரை எழுதிக் கொடுத்ததை என் பெரும் பாக்யமாகக் கருதுகிறேன்.

அன்னை அபிராமி, அறிவிலியாகிய அடியேன் மேல் கருணை கொண்டு பல பேராசிரியர்களை எனக்கு பாடம் சொல்லித் தர ஏற்பாடு செய்தாள்! அம்மா அபிராமி! உனக்கு அடியேன் எப்படி நன்றி நவிலுவது! [நான் அறியேன்!]

"அருணகிரிதாசன்", "திருப்புகழ் செம்மணி" பேராசிரியர் டாக்டர் ம. இராமகிருஷ்ணன், எம்.ஏ., பி.டி., பி.எச்.டி. எனக்கு ஆசிரியனாக, செய்த உதவிக்கு எப்படி நன்றி சொல்லுவதென்று தெரியவில்லை! எந்நேரத்திலும் என்னுடைய கேள்விகளுக்கும், சந்தேகங்களுக்கும் பதில் சொல்லி, தகுந்த விளக்கங்களும் தந்து என்னை

ஊக்குவித்தார். பழகுவதற்கு மிகவும் இனிமையானவர், எளிமையானவர். விருந்தோம்பலுக்கு உதாரணமாய்க் திகழ்கிறார். அவருக்கு என் அன்பு கலந்த ஆழ்ந்த நன்றி.

"வித்யா ரத்னா", "சாக்தப் பேரரசர்" பருத்தியூர் டாக்டர் K. சந்தானராமன், எம்.ஏ., டி.லிட்., பி.எச்.டி. அவர்களும், அவரது துணைவியார் திருமதி டாக்டர் ஹேமா சந்தான ராமன், எம்.ஏ., எம்.ஈடி., பி.எச்.டி. அவர்களும் பல வருடங் களாக தமிழ் ஆன்மீக இலக்கியத் துறைக்கு மகத்தான பணி செய்து வருகின்றார்கள். இருவரும் பரந்த மனப்பான்மை யுடையவர்கள். தங்களது இல்லத்தில், "ஆல் நிழல் அரங்கம்" என்ற இலக்கிய அமைப்பை நிறுவி, இலவச இலக்கிய வகுப்புகளை நடத்தி இளைய தலைமுறையினரை ஊக்கப் படுத்தி வருகின்றனர். அடியேன் அவ்வப்போது கேட்கும் கேள்விகளுக்கு மிகுந்த உற்சாகத்துடன் விளக்கம் தருவார்கள். அவர்களுக்கு எனது அன்பு கலந்த ஆழ்ந்த நன்றி.

ஒளி அச்சு அமைப்பில் பிழைகளை திருத்துவதற்கு உதவிய அன்பர் கவி. கண்ணன் அவர்களுக்கு எனது அன்பு கலந்த ஆழ்ந்த நன்றி. இவர் காஞ்சீ மஹா பெரியவரால் "கவி" என்ற பட்டப் பெயர் பெற்ற பாக்யசாலி.

இந்நூலை குறித்த நேரத்தில் அச்சிட்டு வழங்கிய பதஞ்சலி அண்ட் கோ உரிமையாளர் செல்வி ராமலக்ஷ்மி அவர்களுக்கும், ஒளி அச்சு வடிவமைப்பு பணி செய்து வழங்கிய கே.ஜி.வி. கிராபிக்ஸ் உரிமையாளர் திரு. கே.ஜி. விஸ்வநாத ராவ் அவர்களுக்கும், செல்வி ச. வைஜயந்திமாலா அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி.

குற்றம், குறை இருப்பின் சான்றோர்கள் இச்சிறியேனை மன்னித்தருள வேண்டும். இந்நூலைப் படிக்கும் அன்பர் களுக்கு ஆன்மீக வளர்ச்சிக்கும், அன்னை அபிராமியின் அருளைப் பெறுவதற்கும் இதுவும் ஒரு தூண்டுகோளாயின் அது அடியேன் பெற்ற பாக்யமாகும்.

ஸதா அபிராமீம் சரணம் ப்ரபத்யே!

அபிராமிதாஸன்
மீனாட்சிசுந்தரம் மோகன்

# கள்ள விநாயகர் பதிகம்

### பாடல் - 1

*பங்கயத்தாளும் ஒரு நான்கு தோளும் படா(ம்) முகமும்*
*திங்களின் கோடும் வளர் மோதகத்துடன் செங்கையிலே*
*அங்குச பாசமும் ஆகிவந்(து) என்றனை ஆண்டருள்வாய்!*
*வெங்கயமே! கடவூர் வாழும் கள்ள விநாயகனே!*

தாமரை மலர் போன்ற திருவடியும், நான்கு பெரிய தோள்களும், (யானை முகத்திலிடும்) அலங்கார ஆடையும், சந்திரனின் மூன்றாம் பிறையைப் போன்ற ஒற்றைக் கொம்பும், கொழுக்கட்டையும் கொண்டு தனது சிவந்த திருக்கரங்களில் அங்குசம், பாசம் ஆகியவற்றையும் தரித்து என் முன் வந்து என்னை ஆட்கொண்டு அருள்வாய்! யானை முகத்தோனே! திருக்கடவூரில் வாழும் கள்ள விநாயகனே!

கள்ள விநாயகர் என்று ஏன் பெயர் வந்தது? தேவர்களும், அசுரர்களும் திருப்பாற்கடலை கடைந்தபோது கடைசியாகத் தோன்றியது அமிர்தம், இதை தேவர்கள் ஒரு கடத்தில் இட்டு, ஓர் இடத்தில் வைத்து விட்டு நீராடச் சென்றனர். திரும்புங்கால் அக்கடத்தைக் காணவில்லை. விநாயகப் பெருமானை வணங்காத தால், அமிர்த கலசம் மறைக்கப்பட்டது என்று இறைவன் அசரீரி வாக்காக தெரிவிக்க, விநாயகரை வணங்கினர். அமிர்தகலசமும் வெளிவந்தது. அமிர்த கடத்தை மறைத்ததால் விநாயகருக்கு கள்ள விநாயகர் (சோர கணபதி) என்ற பெயரும் ஏற்பட்டது. இவரே க்ஷேத்திர விநாயகர்.

**வெங்கயமே:** கயம் என்றால் யானை. வெங்கயமே என்பது, (பக்தர்களைக் காப்பதற்காக) கொடுமையான முகம் கொண்ட யானை-பகைவர்களை அழிக்கும்.

## பாடல் - உ

*உண்ணும்பொழுதும் உறங்கும்பொழுதும் ஒரு தொழிலைப்*
*பண்ணும்பொழுதும் பகரும்பொழுதும் நின் பாதத்திலே*
*நண்ணும் கருத்துத் தமியேனுக்கு என்றைக்கும் நல்குவையோ!*
*விண்ணும் புகழ் கடவூர் வாழும் கள்ள விநாயகனே!*

தேவர்களும் போற்றிப் புகழும் திருக்கடவூரில் வாழும் கள்ள விநாயகனே!

அடியேன் சாப்பிடும்போதும், தூங்கும்போதும், ஒரு வேலை செய்யும்போதும், பேசும்போதும் (எந்நிலையிலும்) உன் திருவடியையே கருத்தில் கொள்ளும் நிலையை இந்த ஆதரவு அற்றவனுக்கு என்றும் தந்து அருள்வாய்!

அபிராமி அந்தாதியில்(10) "நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்பது உன்னை, என்றும் வணங்குவது உன் மலர்த்தாள்" என்று சொல்கிறார் அபிராமி பட்டர்.

மேற்கூறிய பாடலில், கள்ள விநாயகரை, இந்த நிலையை (எந்நிலையிலும்) எனக்கு அருள வேண்டும் என்று வேண்டு கிறார். அதாவது விநாயகரை வேண்டினேன். அவர் அருளால் இப்போது அன்னையை எப்போதும், எந்த நிலையிலும் நினைக்கும் பக்குவம் எனக்கு ஏற்பட்டு விட்டது என்று அபிராமி பட்டர் சொல்லாமற் சொல்வது போல் இருக்கிறதல்லவா! விநாயகரை முதலில் துதித்துத்தான் எக்காரியமும் செய்ய வேண்டும் என்பதை மிகத் தெளிவாக அறிகிறோம்.

ஆதிசங்கரர் ஸௌந்தர்யலஹரீயில் (27 'ஜபோ ஜல்ப') இந்தக் கருத்தை வெகு அழகாகச் சொல்கிறார்.

இந்த ஸ்லோகத்தின் பொருள்: "ஆத்மஸமர்ப்பண பாவனையால், வெறும் பேச்சு ஜபமாகவும், கைத் தொழில் அனைத்தும் முத்திரைகளின் விளக்கமாகவும், நடை பிரதக்ஷிணம் செய்வதாகவும், உண்டி முதலியன ஹோம மாகவும், படுத்துக் கொள்ளுதல் நமஸ்காரமாகவும், இன்னும் சுகமாக முயற்சியின்றி எனது செயல் எது உண்டோ அது எல்லாம் உன்னுடைய பூஜை முறையாகவும் ஆகட்டும்". தாயுமானவரும்

*"துள்ளுமறியா மனது பலிகொடுத்தேன் கர்மதுட்ட தேவதைகளில்லை*
*துரிய நிறை சாந்த தேவதையாம் உனக்கே தொழும்பன் அன்பபிஷேகநீர்*
*உள்ளுறையிலென்னாவி நைவேத்யம் பிராணன் ஓங்கு மதிதூபதீபம்*
*ஒரு காலமன்றிது சதாகாலபூஜையா ஒப்புவித்தேன்..."*

என்று, சதா சர்வகாலமும் உன்னையே உள்ளத்தில் கொண்டேன் என்கிறார். இதுதான் உயர்ந்த மானசிக பூஜையாகும்.

### பாடல் - 3

*ஏதொன்றை ஆகிலும் எண்ணிய போ(து) உன் இணைக்கமலப்*
*பாதம் பரவிய பேருக்கு அல்லாமல் பலித்திடுமோ?*
*பேதம் தெரிந்த மறையோர் தமது பெரும் தெருவில்*
*வேதம் பயில்கடவூர் வாழும் கள்ள விநாயகனே!*

சிவாகமங்கள் அறிந்த வேதியர்களால் எழுப்பப்படும் வேத ஒலிகள் கொண்ட வீதிகளையுடைய திருக்கடவூரில் வாழும் கள்ள விநாயகனே! எந்த ஒரு காரியம் செய்ய நினைக்கும் போதும், உனது தாமரைத் திருவடிகளை வணங்குபவர்க்கு அல்லாது மற்றவருக்கு அது பலிக்காது.

திருக்கடவூர் பழைமை வாய்ந்த புண்யக்ஷேத்ரம். அங்கு எப்போதும் தெருக்களில் வேதங்களின் ஒலியை கேட்க முடியும். (வேதியர்கள் வாழும் புண்ய பூமி - திருக்கடவூர்)

### பாடல் - 4

*அரன் என்பவனையும் அம்புயத்தோனையும் ஆழிசங்கு*
*கரன் என்பவனையும் கைதொழவேண்டி உன்கால் தொழுவார்*
*இரவும் பகலும் இயல், இசை, நாடகம் என்னும் நல்நூல்*
*விரவும் தமிழ்க் கடவூர் வாழும் கள்ள விநாயகனே!*

நெற்களஞ்சியம், கலைக் களஞ்சியம் என்று பெருமை வாய்ந்தது, புராதன சோழ நாடு. இச்சோழ நாட்டின் சிகரமாய், புண்ய க்ஷேத்ரமாய் விளங்குகிறது திருக்கடவூர். இங்கு எந்நேரமும் இயல், இசை, நாடகம் என்ற மூன்று கலைகளும் சிறந்து விளங்கும். இத்தகைய புகழ்பெற்ற, தமிழ் மொழிக்கு பெருமை தேடித்தரும் திருக்கடவூரில் வாழும் கள்ள விநாயகனே!

படைத்தல், காத்தல், அழித்தல் செய்யும் தாமரையில் உறையும் பிரும்மா, சக்கரமும், சங்கும் கைகளில் ஏந்திய திருமால், பிறவிப் பெருந்துயரைப் போக்கும் அரன் (ருத்ரன்) ஆகிய மூவரையும் கைளை கூப்பி தொழ நினைப்போர் உன் கால்களில் முதலில் வீழ்ந்து வணங்குவர். அதாவது விநாயகரே முழுமுதற்கடவுள் என்று சொல்லாமற் சொல்கிறார் அபிராமி பட்டர். இதில் உள்ள "முரண் தொடை" கவிநயம் - மூவரைத் தொழுதல் - கை கூப்பி வணங்குதல். விநாயகரைத் தொழுதல் - அவர் காலடியில் வணங்குதல்.

**பாடல் - 5**

*துதியேன் எனினும் தொழுகேன் எனினும் உன் தொண்டர் தமை*
*மதியேன் எனினும் வணங்கேன் எனினும் வலியவந்து*
*கதியே தரும் வழி காட்டிடுவாய்! நின் கருணையினால்*
*விதியே புகழ் கடவூர் வாழும் கள்ள விநாயகனே!*

உன் நாமாக்களைக் சொல்லி உன்னை துதிக்காமலும், உன்னை வணங்காமலும், உன்னுடைய தொண்டர்களை மதிக்கா மலும், வணங்காமலும் நான் இருக்கின்றேன். யான் இவ்வாறு இருந்தாலும் நீ உன் மிக்க கருணையால், வலிய வந்து எனக்கு நற்கதி (மோட்சம்) தரும் வழியைக் காட்டுவாயாக! பிரமன் புகழும் திருக்கடவூரில் வாழும் கள்ள விநாயகனே!

(விதி : பிரமன்) "விதியே புகழ் கடவூர்" - மண்ணுலகில் பிறந்தவர்கள் அவரவர்க்கு விதிக்கப்பட்ட காலவரையடுத்து உயிர் நீப்பர். இந்த விதியை எழுதுபவர் பிரமன். அதனால் பிரம்மனுக்கு 'விதி' என்னும் பெயர். ஆனால் திருக்கடவூரில், காலனை சிவபிரான் ஸம்ஹாரம் செய்து மார்க்கண்டேயனை சிரஞ்சீவியாக்கினார்! இது விதிக்கு மீறிய செயல்! அதனால் அந்த விதியை எழுதிய பிரமன், இந்த அதிசயத்தைக் கண்டு திருக்கடவூர் க்ஷேத்ரத்தை புகழ்கிறார்! என்னே அபிராமிபட்டரின் வாக்விலாஸம்!

**பாடல் - 6**

*நாகம் துரகம் பலபணி ஆடை நவநிதிகள்*
*பாகஞ்சு மென்மொழியாள் போகமும் உன்றன் பாதத்திலே*
*மோகம் திகழப் பணிந்தோர்க்கு அல்லாமல் முயன்றிடுமோ?*
*மேகம் பயில் கடவூர் வாழும் கள்ள விநாயகனே!*

விநாயகனே எல்லாப் போகங்களையும் தரும் வல்லவன் என்று சொல்லும் பாடல் இது. மேகங்கள் சூழ்ந்த திருக்கடவூரில் வாழும் கள்ள விநாயகனே!

(உலக மக்கள் எப்போதும் இன்பத்தையே (போகம்) விரும்புவர்) யானை, குதிரை, பல அணிகலன்கள், பட்டா டைகள், நவநிதிகள், வெல்லத்தை விட இனிய, மென்மையான சொல்லுடைய மாதர் ஆகிய பல போகங்களின் நுகர்ச்சி எல்லாம் உன் திருவடியில் விருப்பம் கொண்டு பணிந்தோர்க்கு அல்லாது வேறு எவருக்கும் கிடைக்குமோ?

அபிராமி அந்தாதியிலும்(52) "வையம், துரகம், மதகரி, மாமகுடம், சிவிகை, பெய்யும் கனகம், பெருவிலை ஆரம்..." வருவது காண்க. அங்கும், எல்லாப் போகங்களும், முற்பிறவியில் அன்னை அபிராமியை அன்புடன், அவள் திருவடித்தாமரையை வழிபாடு செய்த பக்தர்களுக்கே கிடைக்கும் என்று அபிராமி பட்டர் கூறுகிறார். (நாகம்-யானை)

**நவநிதி** : 1. கச்சப 2. கற்ப 3. சங்க 4. பதும 5. நந்த 6. நீல 7. மகா 8. மகாபதும 9. முகுந்த.

### பாடல் - 7

*இளம் குஞ்சரச் செழுங்கன்றே! எனச்சொல்லி ஏத்திநன்றாய்*
*உளம் கசிந்து அம்கையால் குட்டிக் கொண்டோர்க்கோர்*
*குறையும் உண்டோ?*
*வளம் கொண்ட மூவர் தமை மறித்தே தமிழ்மாலை கொண்டு*
*விளங்கும் புகழ் கடவூர் வாழும் கள்ள விநாயகனே!*

கவிவளம் கொண்ட சமயக் குரவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார் மூவரும் தமிழ் பாமாலைகளால் போற்றித் துதித்து, புகழ் கொண்ட திருக்கடவூர் வாழும் கள்ளவிநாயகனே! உன்னை இளமை பொருந்திய செழிப்பான யானைக் கன்று என்று சொல்லி துதித்து உள்ளம் உருகி நன்றாய் நெற்றியில் கைகளால் குட்டிக் கொண்டு வணங்குபவர்களுக்கு ஏதும் ஒரு குறை உண்டோ? (விநாயகரைத் துதிப்போர்க்கு எந்த விதமான குறையும் இல்லை).

அபிராமி பட்டர் அந்தணர் பரம்பரையில் உதித்தவர். எந்த ஒரு பூஜை செய்தாலும், நெற்றியிலே குட்டிக் கொண்டு, "சுக்லாம்பரதரம்" என்று சொல்லித்தானே ஆரம்பிப்பது வழக்கம். இது விநாயகரை வேண்டிச் செய்யும் விண்ணப்பம். இவ்வாறு செய்வதால் சிரசிலுள்ள அமிருதம் எல்லா நாடிகளிலும் பாயும் என்பது ஐதீகம்.

**பாடல் - 8**

*தண்டாயுதத்தையும் சூலாயுதத்தையும் தாங்கி என்னைக்*
*கண்டாவி கொள்ள நமன்வரும் வேளையில் காத்திடுவாய்!*
*வண்டாரவாரம் செயு(ம்) மலர்ச்சோலை வளப்பமுடன்*
*விண்டாவிய கடவூர் வாழும் கள்ள விநாயகனே!*

வண்டுகள் ரீங்காரம் செய்யும் வளப்பம் மிகுந்த மலர்ச் சோலைகள் வானளாவி நிற்கும் திருக்கடவூரில் வாழும் கள்ள விநாயகனே!

கைகளில் தண்டாயுதத்தையும், சூலாயுதத்தையும் தாங்கி யமன் என்னைக் கண்டு, என் உயிரை எடுத்துச் செல்ல வரும் நேரத்தில் என்னைக் காப்பாற்றுவாயாக!

அபிராமி அம்மை முதல் பதிகத்திலும்(6) "உம்பர் நாடு அளவெடுக்கும் சோலை ஆதிகடவூர்..." என்று வருவது காண்க...

திருக்கடவூர் காவிரி பாயும் வளம் மிகுந்த ஊர். எங்கு பார்த்தாலும் பச்சைப் பசேல் என்று வளர்ந்த நெற்பயிர்களும், அடர்ந்த சோலைகளும், மலர்கள் நிறைந்த பொய்கைகளும் சூழ்ந்து இயற்கை எழிலும், தெய்வத் திருவருட் பெருக்கலும் பெற்று விளங்கும் புண்ய பூமியாகும். வீதிகளில் எந்நேரமும் வேதங்களின் ஒலியைக் கேட்கலாம். முதல் மூவரும், முப்பத்து முக்கோடி தேவர்களும் வந்து பூஜை செய்த திருத்தலம்.

தமிழ் மொழிக்கே உரித்தான இயல், இசை, நாடகம் என்ற மூன்று கலைகளும் வளமுடன் செழித்தோங்கும் புண்ய பூமி திருக்கடவூர் - அன்னை அபிராமி உதித்த இடமல்லவா! அன்னையை "கலாநிதி" - கலைகளின் இருப்பிடம் என்று வாக்தேவதைகள் போற்றுகின்றனர் (ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் - 797)

## பாடல் - 9

*மூவரும் தங்கள் தொழிலே புரிந்திட முந்திமுந்தித்*
*தாவரும் நெற்றியில் தாக்கி உன் நாமத்தைச் சாற்றிடுவார்*
*தேவரும் போற்றிய தேவே! உனை அன்றித் தெய்வம் உண்டோ?*
*மேவரும் சீர்க்கடவூர் வாழும் கள்ள விநாயகனே!*

போற்றுதற்கும் அரிய புகழ்பெற்ற திருக்கடவூர் வாழும் கள்ள விநாயகனே!

முதல் மூவரான பிரமமா, விஷ்ணு, ருத்ரன் முதலானோர் ஒருவருக்கொருவர் முந்திக் கொண்டு, தங்களுடைய படர்ந்த நெற்றியில் குட்டிக்கொண்டு உன் திருநாமங்களை சொல்வர், அனைத்து தேவர்களும் போற்றிய தேவனே! உன்னையன்றி வேறு தெய்வம் உண்டோ? (நீயே முழுமுதற் கடவுள்)

மும்மூர்த்திகளான பிரம்மா, திருமால், ருத்ரன் போட்டி போட்டுக் கொண்டு விநாயகரை வணங்குகிறார்கள் என்று சொல்லி விநாயகரை எல்லோரும் தொழ வேண்டிய முழுமுதற் கடவுள் என்பதை உலகறிய உணரச் செய்கிறார் அபிராமி பட்டர்.

## பாடல் - 10

*மைப்பொரு வாரண மாமுகம் மீதினில் வாய்ந்த துதிக்*
*கைப்பொருளே! என்று கைதொழு வோர்க்கு உன்கருணை வைப்பாய்!*
*அப்பொருளாம் அமுதீசர் மகிழ் அபிராமிஅம்மை*
*மெய்ப்பொருளே! கடவூர் வாழும் கள்ள விநாயகனே!*

அமுதீசருக்கும் அவர் மகிழும் அபிராமி அம்மைக்கும், புதல்வனாய் தோன்றியவனே! மெய்ப் பொருளாய் ப்ரணவ சொரூபமாய் விளங்குபவனே! திருக்கடவூர் வாழும் கள்ள விநாயகனே! உன்னைக் கரிய யானை முகத்துடன், அதன் மீது விளங்கும் துதிக்கையுடன் ஓங்கார வடிவாய் துதிப்போருக்கு உன்னுடைய கருணையைத் தந்து அருள்புரிவாய்!

அபிராமி பட்டர் அபிராமி அந்தாதியிலும் "தார் அமர்கொன்றையும் சண்பக மாலையும் சாத்தும் தில்லை ஊரர் தம் பாகத்து ஊமை மைந்தனே..." என்று ஆரம்பிக்கிறார். அதாவது சிவனின் ப்ரணவத்திற்கும், சக்தி ப்ரணவத்திற்கும் சமஷ்டியான ஓங்கார ப்ரணவ சொரூபமாக வர்ணிக்கிறார்.

முத்துஸ்வாமி தீட்சிதரும், "ப்ரணவஸ்ரூப வக்ர துண்டம்" என்று சொல்வர். (வாதாபி கணபதிம்)

# அபிராமி அம்மை பதிகம் - I

## காப்பு

*தூய தமிழ் பாமாலை சூட்டுதற்கு மும்மதன் நால்*
*வாய் ஐங்கரன்தாள் வழுத்துவாம் - நேயம் நிதம்*
*எண்ணும் புகழ்க்கடவூர் எங்கள் அபிராமவல்லி*
*நண்ணும் பொற்பாதத்தில் நன்கு.*

நாள்தோறும் அன்பர்கள் தங்கள் உள்ளத்தில் தியானிக்கும் புகழ்மிக்க திருக்கடவூரின் உயிர்நாடியாய் விளங்கும் எங்கள் அபிராமவல்லியின் அழகிய பொற்பாதங்களில் தூய்மையான செந்தமிழ் பாக்களால் தொடுக்கப்பட்ட பாமாலையை அணி வித்தற்கு, மும்மத நீர்களும் தொங்கும் வாயும் ஐந்து கைகளும் உடைய விநாயகப் பெருமானின் திருவடிகளை வணங்குவோம்.

மும்மதநீர் - 1. கன்னமதம் - காதுகளில் இருந்து வரும் நீர். 2. கபோலமதம் - கன்னத்திலிருந்து ஒழுகும் நீர், 3. பீச மதம் - விதை, மூலம், சுக்கிலம்.

**மற்றுமொரு விளக்கம் :** இச்சை, கிரியை, ஞானம் எனும் மூன்று சக்திகளையுடைய, தொங்கும் வாயுடன், ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்று ஐவகைத் தொழில் புரியும் ஐந்து கரங்களைக் கொண்ட விநாயகப் பெருமானின் பாதகமலங்களை வணங்குவோம். (முன்னது - ஸ்தூலம், பின்னது - ஸூக்ஷ்மம்).

## 1. பதினாறு பேறும் தந்து அருள்வாய்!

*கலையாத கல்வியும் குறையாத வயதும் ஓர்*
*கபடு வாராத நட்பும்*
*கன்றாத வளமையும் குன்றாத இளமையும்*
*கழுபிணி இலாத உடலும்*
*சலியாத மனமும் அன்பகலாத மனைவியும்*
*தவறாத சந்தானமும்*

*தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்*
*தடைகள் வாராத கொடையும்*
*தொலையாத நிதியமும் கோணாத கோலும் ஒரு*
*துன்பமில்லாத வாழ்வும்*
*துய்ய நின்பாதத்தில் அன்பும் உதவிப் பெரிய*
*தொண்டரொடு கூட்டு கண்டாய்*
*அலையாழி அறிதுயிலும் மாயனது தங்கையே*
*ஆதிகடவூரின் வாழ்வே*
*அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி*
*அருள்வாமி அபிராமியே!*

“பதினாறு பேறும் பெற்று வளமுடன் வாழ்க” என்று வாழ்த்துவது தொன்றுதொட்டுவரும் நம் நாட்டின் பண்பாடு.

அபிராமி பட்டர் அபிராமி அம்மை பதிகத்தின் முதல் பாடலிலேயே, அன்னை அபிராமியிடம் பதினாறு பேறுகளையும் சொல்லி, அத்துடன் நில்லாமல், அவை எத்தகைத்தாக இருக்க வேண்டும் என்பதையும் சொல்வளம், பொருட்செறிவுடன் மிகுந்த கவிநயத்துடன் வேண்டுவது அவர், “அன்னை அபிராமியின் அருட்செல்வர்” என்பதை உணர்த்துகிறது.

அபிராமி பட்டர் உலக விஷயங்களில் அறவே பற்று அற்றவர். அல்லும் பகலும் அன்னை அபிராமியை தன் மனத்தாமரையில் இருத்தி, துதிசெய்து, தன்னையே மறந்து தாயுடன் ஒன்றியவர். மன்னன் சரபோஜீ தந்த மான்யங்களை மறுத்தவர், மன்னனிடம், “நிலம் புலத்தை அழிக்கும், பொருள் மருளை அளிக்கும்” என்று கூறினவர். அவ்வாறு இருந்தும், உலக மக்களின் நலம் கருதி, அன்னையிடம் வேண்டுவது, அவர் ஒரு ஈடு இணையற்ற மகான் என்பதை தெள்ளத்தெளிவாக நமக்கு உணர்த்துகிறது.

**கலையாத கல்வி:** “கற்றோருக்கு சென்றவிடமெல்லாம் சிறப்பு” என்ற பழமொழிக்கேற்ப, கல்வியின் இன்றியமை யாமையை முதற்கண் வைத்திருப்பது இப்பாடலின் சிறப்பு.

திருவள்ளுவர் திருக்குறளில்

“*கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு;*
*மாடல்ல மற்றையவை*” (400) என்று கூறுவர்.

அதாவது, கல்வியே எல்லாச் செல்வங்களிலும் சிறந்த செல்வம்.

இந்தக் கல்வி எவ்வாறு இருக்க வேண்டும்? - "கலையாத தாக". கலைதல் என்றால் - நிலையாக இல்லாமல், அழிதல், குலைதல், மறைந்து விடுதல் என பலவகைப் பொருளுடைத்து. ஒருவன் கற்ற கல்வி அவனுக்கு என்றும் கலையாத (மறந்து விடாத) கல்வியாக நின்று, வேண்டிய தருணத்தில் உற்ற துணையாய் உதவ வேண்டும். இல்லையென்றால் அவ்வாறு கற்ற கல்வியினால் யாதொரு பயனுமில்லை.

மகாபாரதப் போரில் கர்ணனுக்கு பரசுராமரிடம் அவன் கற்ற வித்தைகள் யாவும் மறந்து போயின. பரசுராமர், க்ஷத்திரியர் களுக்கு எதிரியானவர். பிராமண வேடம் பூண்டு கர்ணன் அவரிடம் சீடனாகி பயிற்சி பெற்றான். ஒரு சம்பவத்தில் பரசுராமர், கர்ணன் ஒரு க்ஷத்திரியன் என்ற உண்மையை உணர்ந்து, அவனுக்கு, "அவன் கற்ற கலைகள் எல்லாம் தக்க தருணத்தில் உதவாது" என்று சாபமிட்டார். கல்வி கலைந்து விட்டதால், கர்ணன் மகாபாரதப் போரில் தோல்வியுற்றான்.

மேலும் கல்வி என்பது இம்மண்ணுலகில் பிறந்த சீவர்களுக்கு முக்தி என்னும் அழியாத வீடு பேற்றைப் பெற உதவும் ஞானத்தைத் தரவேண்டும். திருவள்ளுவரும்

"*கற்றதனால் ஆய பயனென்கொல்? வாலறிவன்*
*நற்றாள் தொழஅர் எனின்*" என்பார். (2)

தூய அறிவுடையவனாகிய இறைவனது நல்ல திருவடிகளை நாளும் வணங்காராயின், அவர்கள் கற்ற நூல்களால் ஆகிய பயன் யாது? (அதாவது இறைவனை மறவாத கல்வி) இதன் கருத்து ஒருவன் இப்பிறவியிலேயே இறைவன் திருவடியை அடையச் செய்வதே "கலையாத கல்வி" என்பதாம்.

**குறையாத வயதும்:** திருக்கடவூர் - கால ஸம்ஹார க்ஷேத்ரம். ஆயுள் பதினாறு வயசு என்று நிர்ணயிக்கப்பட்டாலும், மார்க்கண்டேயன் இறைவன் - இறைவி அருளால் சிரஞ்சீவியாக ஆனான். உடல் - அழியும் வஸ்து. உயிர் - ஆன்மா. என்றும் நிலையாய், நித்யமாய் உள்ளது. அன்னையின் அருளாளர்கள் - ஜீவன் முக்தர்கள். அதாவது உடலைத் துறந்து பிறவாநிலையை அடைந்தவர்கள். ஆனால் இவ்வுலகத்தில் பிறந்தவர்கள் இன்பங் களை அனுபவித்து பின் இறுதியில் வீடு எனும் பேற்றை அடைய

விரும்புவர். அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கு புருஷார்த்தங்களைத் தர்ம சாஸ்திரம் கூறுகிறது. அதாவது அறநெறியில் நின்று பொருளை ஈட்டி, இன்பத்தை நுகர்ந்து, இறுதியில் வீடுபேறு (முக்தி - பிறவாநிலை) அடைய குறையாத வயதைக் கொடுப்பாயாக என்று அன்னையிடம் விண்ணப்பிக் கிறார் அபிராமி பட்டர். வேதமும், "சதமானம் பவதி ஸதாயு: புருஷ:" என்று சொல்கிறது.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்தில் வாக்தேவிகள், அன்னையை - ஸர்வ ம்ருத்யு நிவாரிணீ(552) என்று போற்றுகிறார்கள். அன்னை தன் பக்தர்களை எல்லாவித மரணங்களிலிருந்தும் (அகாலமரணம், துர்மரணம்) காப்பாற்றுபவள். ம்ருத்யுஞ்சய மந்திரம் (த்ரயம்பகம் யஜாமஹே...) சொல்லுவதும் இதன் பொருட்டு தானே! அபிராமி அந்தாதியில்(25) "உலகிற்கு அபிராமி என்னும் அருமருந்தே!" என்று வருவதும் காண்க!

**ஓர் கபடுவாராத நட்பும்:** மனிதன் பாசம், நேசம் என்ற இரண்டு பந்தங்களில் கட்டுப்படுகிறான். பாசம் - பிறப்பினால் ஏற்படுவது, நேசம் - தானாக மற்றவர்கள் மீது வைக்கும் அன்பு. (இங்கு சீவராசிகளையும் சேர்த்துக் கொள்ளலாம்) உற்றார் என்ற சொல்லும் இதையே குறிக்கிறது. அதாவது மனிதனுக்கு உறவினரைக் காட்டிலும் சில சமயங்களில் நண்பர்களின் நல்லுறவே நல்ல துணையாகவும், பக்க பலமாகவும் அமைகிறது. இந்த நட்பு எப்படி அமைய வேண்டும்? ஓர் கபடு வாராத நட்பாகத் திகழ வேண்டும். கபடு என்றால் களங்கம், வஞ்சம் என்று பொருள். திருவள்ளுவர்,

"*முகநக நட்பது நட்பன்று; நெஞ்சத்து*
*அகநக நட்பது நட்பு*" என்பார். *(786)*

**பொருள்:** மனம் மகிழாமல் முகம் மட்டும் மலரும்படி நட்பு செய்வது சிறந்த நட்பு ஆகாது. அன்பால் உள்ளமும் மலர நட்பு செய்வதே சிறந்த நட்பாகும். இராமலிங்க வள்ளலாரும், "உள்ளொன்று வைத்து புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்" என்று அன்னையிடம் வேண்டுகிறார்.

இணை பிரியா நட்பிற்கு ஓர் இலக்கணமாய் வாழ்ந்தவர்கள் கோப்பெருஞ் சோழனும், பிசிராந்தையாரும் என்று தமிழ் இலக்கிய வரலாறு கூறுவதையும் காண்க.

மேலும் அனைத்து சீவராசிகளிடத்தும் அன்பு கொள்வதும் ஒரு விதமான நட்பு என்று பொருள் கொள்ளலாம். சில மனிதர்கள் சிலவகைப் பிராணிகள் (நாய், பூனை, மாடு, குதிரை போன்று) மீதும் அளவிலா நேசம் கொள்வர்.

நமது தமிழ்நாட்டில் சிபிச் சக்கரவர்த்தி ஒரு பறவைக்காகவும், பாரிமன்னன் ஒரு முல்லைக் கொடியிடமும் காட்டிய அன்பும் நம் நினைவில் என்றும் நிற்கிறது!

**கன்றாத வளமை:** வளமை என்றால் செழிப்பு, நன்மை, பொருள், செல்வம் என்று தமிழ் அகராதி கூறுகிறது. ஒருவன் நல்ல செழிப்போடு திகழ வேண்டும். அது குறையாமல், வாடாத பயிர்களைப் போல் என்றும் நிலையாக நிற்க வேண்டும். இதை பழுதுபடாத உடல் சக்தி என்றும் சான்றோர்கள் கூறுவர். உடல் சக்தியை அடுத்து, வாழ்க்கைக்கு தேவையான பொருள் வளத்தை ஒருவன் பெற வேண்டும். அப்போதுதான் தான, தர்மங்களை குறைவின்றிச் செய்ய முடியும்.

தானத்தில் சிறந்தது 'அன்னதானம்' என்று யாவரும் அறிவோம். எல்லோரும் உணவை உண்பவனாக மட்டும் இல்லாது அதை வழங்குபவனாகவும் இருக்க வேண்டும். வளமை அல்லது செழிப்பு ஒருவனுக்கு அவசியம் என்பதின் கருத்து - அவன் பிறர்க்கு வாரி, வாரி வழங்க வேண்டும். கொடுக்கக் கொடுக்க குறையாமல் ஊற்று நீரைப் போல பெருகிக் கொண்டே இருக்க வேண்டும். இது தான் கன்றாத வளமை.

**குன்றாத இளமை:** இளமை என்பது பொதுவாக உடலைக் குறிக்கும். இளமைப் பருவம் என்பது சிறு பருவத்தையும் மென்மையையும், ஆற்றலையும் குறிக்கும். அப்போது துடிப்பும், உற்சாகமும், வேகமும் அதிகமாய் இருக்கும். வயது ஆக, ஆக உடலில் தளர்ச்சியும், முடியில் நரையும் ஏற்படுவது இயற்கையின் நியதி. இதை யாராலும் தடுக்க இயலாது. பின் இளமை! அதுவும், "குன்றாத இளமை" வேண்டும் என்பதின் பொருள் யாது?

ஒருவன் உடல் தளர்ந்து விட்டாலும், உள்ளம் என்றும் உற்சாகத்துடன் இளமைத் துடிப்பும் குறையாது இருந்தால், அதுவே அவனுக்கு உன்னத காரியங்கள் செய்வதற்கு உற்ற துணையாய் உரிய காலத்தில் உதவும். (எழுபது வயதான சில பெரியவர்கள் ஏழு வயது சிறுவன் போல உற்சாகத்துடன் சமூகத் தொண்டு செய்வதைக் காண்கிறோம்!)

அன்னை அபிராமியும் திருக்கடவூர் திருக்கோயில் கால சங்காரக் கடவுள் சன்னிதியில், இடது பக்கத்தில் பாலாம்பிகை யாக (திருமகள், கலைமகள் உடன்) காட்சி தருவதும் காண்க! அபிராமி பட்டரும் அன்னையை என்றும் "பாலையாக" வழிபட்டவர் அல்லவா! அவர் மகளுக்கும் 'பாலா' என்று பெயர். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில், வாக்தேவதைகள், அன்னையை - தருணீ(358), நித்யயௌவனா(430), வயோவஸ்தா விவர்ஜிதா(470), க்ஷயவிருத்தி வினிர்முக்தா(344) என்று வர்ணிக்கிறார்கள். அன்னை என்றும் இளைய கன்னிகையாக, முக்காலத்திலும் மாறாத யௌவனத்துடன், வயதால் மாறுதல் இல்லாமல் தேய்வு, வளர்ச்சியற்றவளாய் விளங்குபவள். அதாவது என்றுமே நித்ய கன்னி.

அபிராமி அந்தாதியில்(8) "அழியாத கன்னிகை" என்று வருவதும் காண்க! தாயுமானவரும், "அகிலாண்ட கோடி ஈன்ற அன்னையே பின்னேயும் கன்னியென மறைபேசும் ஆனந்தரூப மயிலே!" என்பர்.

அன்னை அபிராமி என்றும் இளமையாக இருப்பதால், அபிராமி பட்டரும், சேயாக நின்று தாயிடம், "அக்குணத்தை எனக்கும் அருள்வாயாக!" என்று கேட்பது போல் உள்ளதல்லவா!

**கழுபிணி இலாத உடலும்:** "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்பதை யாவரும் அறிவர். தீராத நோய் வந்து விட்டால், நினைப்பெல்லாம் நோயில் சென்று மனமும் பழுதாகி விடும். அதாவது பிணி உடல், மனம் இரண்டையும் பாதிக்கும். அதிலும் கழுபிணி என்பது புற்றுநோய், க்ஷயரோகம் போன்ற கொடிய நோய்களைக் குறிக்கும். இவற்றால் ஏற்படும் துன்பத்திற்கு அளவே இல்லை. வாழ்நாளில் கஷ்டப்பட்டு சம்பாதித்த பொருளும் நோய்களுக்காக செலவிட நேரும். காலமும் வீணாகிவிடும். எனவே உடல் கொடிய பிணிகளால் துன்பப் படக்கூடாது என்று செய்யும் பிரார்த்தனை இது!

அபிராமி பட்டர், அபிராமி அந்தாதியில்(24) அன்னை அபிராமியை, "பிணிக்கு மருந்தே..." என்று சொல்வது, அன்னையால் தான், பிணிகள் வராது இருக்கும் நிலையை அருள முடியும் என்பதை ஊர்ஜிதப்படுத்துகிறார்!

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்திலும்(748) "ரோகபர்வத தம்போலி" என்று வரும். வியாதி எனும் மலையைப் பிளக்கும் வஜ்ராயுதமாய் இருக்கிறார் அன்னை!

அபிராமி அம்மை இரண்டாவது பதிகத்திலும் (கடைசிப் பாடலில்) மீண்டும் பதினாறு பேறுகளைச் சொல்லி வேண்டுகிறார். அதில் 'நோயின்மையை' முதற்கண் வைத் திருப்பது மனிதனுக்கு நோயில்லா வாழ்வு இன்றியமையாதது என்பதை புலப்படுத்துகிறது!

**சலியாத மனமும்:** "கழுபிணி இலாத உடலும்" என்று சொன்னபின், அதைத் தொடாந்து "சலியாத மனம்" என்று அபிராமி பட்டர் வேண்டுவது மிகவும் பொருத்தமாய் உள்ளது!

ஒருவனுக்கு உடல் சீரான நிலையிலிருந்தாலும் மனம் தளர்ந்து விட்டால் துன்பம் தான் மிஞ்சும். இதையே தான் அபிராமி அந்தாதியில்(69) "தளர்வறியா மனந்தரும்" என்று குறிப்பிடுகிறார் அபிராமி பட்டர்.

மனம் என்பது ஒரு விஷயத்தில் நிலையாக நிற்காது. அலைகள் ஓயாதது போல க்ஷணத்திற்கு க்ஷணம் மாறிக் கொண்டே இருக்கும். அங்கேயும் இங்கேயும் அலை பாய்வது மனம் என்று அறிந்தோர் கூறுவர்.

வடமொழியில் 'சலம்' என்றால் அசைவது என்று பொருள். சஞ்சலம் என்ற சொல்லும் இதிலிருந்து வந்தது. ஒரு சமயத்தில் மனம் ஒன்றையடைய விரும்புகிறது. அது கிடைத்தவுடன் சந்தோஷப்படுகிறது. சில நாட்களுக்கு பிறகு அது அலுத்து விடுகிறது. பிறகு மற்றொரு பொருளின் மீது மனம் நாட்டம் கொள்கிறது. இவ்வாறு மனம் என்பது ஒன்றின் மீது நிலைத்து நிற்காமல் மாறிக்கொண்டே இருக்கிறது. இதற்கு காரணம் என்ன? மனம் பற்றும் பொருட்கள் எல்லாம் அநித்யமானவை - அதாவது அழியக்கூடியவை. அப்படி யென்றால் அழியாத வஸ்து ஒன்று உளதா? ஆம். உண்டு. அதுதான் மனத்திற்கும், சொல்லுக்கும் எட்டாத பரம்பொரு ளான கடவுள்.

எனவே மனத்தாமரையில் அன்னை அபிராமியை பதித்து விட்டால் அம்மனம் சஞ்சலப்படாமல் நிலைத்து விடும். அல்லும், பகலும் அயராது அன்னை அபிராமியை தனது மனதில் அர்ச்சித்தவர் அபிராமிபட்டவர்.

**அன்பு அகலாத மனைவி:** மண்ணுலகில் பிறந்த மனிதர் களுக்கு நான்கு வகையான ஆசிரமங்களை வேதம் சொல்கிறது.

பிரம்மசாரி, கிருஹஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி என்று நான்கு நிலைகள். இதில் கிருஹஸ்தனாக - அதாவது ஒருத்தியை மணந்து, கடமைகளைச் சரிவரச் செய்து அறவழியில் நிற்பவன். மேலும் எந்த காரியத்திலும் மனைவியில்லாமல் அவன் பங்கு கொள்ள முடியாது. எனவே இல்லற வாழ்க்கையே மிகவும் உயர்ந்தது என்று சொல்லப்படுகிறது. திருவள்ளுவரும்

*"இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்*
*நல்லாற்றின் நின்ற துணை."* என்று கூறுவார். *(41)*

மனைவியோடு கூடிச் சிறந்த வாழ்க்கை வாழ்பவனே கல்வி நிலை, மனத் தவநிலை, துறவு நிலை என்னும் மூன்று நிலைகளில் இருப்போர்க்கு உற்ற துணைவன் ஆவான்.

இல்லற வாழ்க்கையே சிறந்தது என்று பார்த்தோம். இதற்கு ஆதாரமாயும், ஊன்று கோலாயும் இருப்பவள் தான் ஒரு நல்ல இல்லறத்தரசியாவாள். எனவே "மனைவி" என்பவள் எல்லோரின் மதிப்பிற்கும் உரியவள். அம்மனைவியின் அன்பு எந்நாளும் ஒருவனுக்கு அமைந்துவிட்டால் அவன் சாதிக்க முடியாத காரியங்கள் யாதும் இல்லை. மனைவியின் அன்பு மாறிவிட்டால் வீண் அச்சமும், துன்பமும் தான் நிற்கும். எந்த ஒருசெயலிலும் ஈடுபாடு இருக்காது. வாழ்க்கையும் வெறும் ஜடவாழ்க்கையாய் விடும். திருவள்ளுவர்,

*"பெற்றான் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்*
*புத்தேளிர் வாழும் உலகு"* என்பார். *(58)*

பெண்டிர் தங்கள் கணவரின் அன்புக்கு உரியவராகப் பெறுவாராயின், அவர்கள் மறுமையில் சுவர்க்க லோகத்தை அடைவர். இது கணவன் - மனைவி இருவருக்கும் பொருந்தும்.

**தவறாத சந்தானம்:** மனைவியை அடுத்து வருவது மக்கட் பேறு. இல்லற வாழ்க்கை இனித்திட, குலம் பெருகிட குழந்தைகள் அவசியமல்லவா! சந்தானம் என்றால் புத்திர பாக்யம் என்று பெரியோர்கள் கூறுவர். தவறாத சந்தானம் என்பது பலவித பொருள்களையுடையது. 1. குழந்தைகள் தவறாது பிறக்க வேண்டும். 2. அவர்களை அகால மரணம் அண்டக்கூடாது. 3. "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை"

என்பதற்கேற்ப அவர்கள் நடந்து கொள்ள வேண்டும். 4. தாய் தந்தையாரின் பெருமையை என்றும் நிலைநாட்டும் புத்திரர்களாய் வாழ்க்கையில் விளங்க வேண்டும். திருவள்ளுவர், திருக்குறளில்

*"மங்கலம் என்ப மனைமாட்சி, மற்றதன்*
*நன்கலம் நன் மக்கட் பேறு"* என்பார். *(60)*

**பொருள்:** மனைவி மாண்புடையவளாக அமைவது இல்லறத்திற்கு மங்கலம் என்றும், அதற்கு சிறந்த அணிகலமாக அமைவது அறிவுள்ள மக்களைப் பெறுவது.

இங்கு 'அறிவு' என்று குறிப்பிட்டது. குலப் பெருமையைக் காத்து உலகில் சான்றோனாய் வாழ்வது. மேலும் திருவள்ளுவர்,

*"ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்*
*சான்றோன் எனக்கேட்ட தாய்"* என்பார். *(69)*

தன் மகனை, "சான்றோன்" எனப் பிறர் சொல்லக் கேட்ட தாயானவள் அவனைப் பெற்ற பொழுது அடைந்த இன்பத்திலும் மிகவும் இன்புறுவாள்.

எனவே, "தவறாத சந்தானம்" என்பது இல்லறத்தின் இனிய கானம் ஆகிறதல்லவா!

**தாழாத கீர்த்தியும்:** கீர்த்தி என்றால் புகழ். ஒருவன் வாழ்நாள் பூராவும் கஷ்டப்பட்டு பொருள் ஈட்டுவதில் முதலில் ஈடுபடு கிறான். பின் அது அவனுக்கு திருப்தி தருவதில்லை. அவனை ஊரார் மெச்சி புகழ வேண்டும் என்ற நினைப்பு அவனுக்கு வருகிறது. அதற்காக அறவழியில் சென்று பிறருக்கு நல்ல காரியங்கள் செய்கிறான். அவன் புகழ் வளர்கிறது. இப்போது அவனுக்குரிய சிந்தனையெல்லாம் அப்புகழ் என்றும் நிலைத்திட வேண்டும் என்பதே. அதாவது அரும்பாடுபட்டு அடைந்த புகழ் என்றும் இறங்கிவிடாமல் உயர்ந்த நிலையில் (தாழாத) நிற்க வேண்டும். (மண்ணுலகை விட்டு மறைந்த பின்னும்)

இவ்வாறு தாழாத கீர்த்தியடைய என்ன வழி? வாழ்நாள் பூராவும் ஏழைகளுக்கு வேண்டியதைத் தருக. அதனால் புகழ் பெருக வாழ்க! என்பதைச் சொல்லுகிறார் அபிராமி பட்டர்.

**மாறாத வார்த்தையும்:** வாழ்க்கையில் முக்கியமாக அமைய வேண்டியது - ஒருவன் தான் சொன்ன வாக்கிலிருந்து மீறாதிருப்பது. அதாவது என்ன கஷ்டம் வந்தாலும் சொன்ன சொல்லைக் காப்பாற்றுவது. ஹரிசந்திர மகாராசனின் புகழ் யாவரும் அறிந்ததே. அவர் உடலாலும், உள்ளத்தாலும் பட்ட வேதனைகளும், சோதனைகளும் எண்ணிலடங்கா. அவர் எது வந்தாலும் சரி, தான் சொன்ன வார்த்தையிலிருந்து மாறாது வாழ்ந்து காட்டினார். இது நம் பாரத நாட்டின் பெருமை. மகாத்மா காந்தியடிகளும் தன்னுடைய சிறு வயதில் “ஹரிச்சந்திரா” நாடகம் பார்த்த பின்னரே உண்மையே பேச வேண்டும் என்று உறுதி பூண்டார் என்பது அவர் சுயசரிதத்திலிருந்து தெரிய வருகிறது. இராமாயணத்திலும் தசரதன் கைகேயிக்குத் தந்த வரங்களை ஸ்ரீ இராமர் காப்பாற்றினார் அல்லவா! தசரதன் சொன்ன சொல் மாறாத வார்த்தை என்பதை நிரூபித்துக் காட்டினார். உயிரினுக்கும் மேலாக உத்தமர்கள் வாழ்ந்து காட்டிய நெறியை நாமும் பற்றுவோமாக!

**தடைகள் வாராத கொடையும்:** மனிதன் தன் வாழ்நாளில் எவ்வளவு சம்பாதித்தாலும் “தானம்” செய்வதற்கு மனம் வேண்டும், அவ்வாறு மனம் இருந்தாலும் சில சமயங்களில் சில தடைகள் வரலாம். சுற்றியிருக்கும் உற்றார், உறவினர்களே அதற்கு தடையாவதையும் நாம் பார்க்கிறோம். அது இல்லாமல், தன் மனதில் தோன்றிய வண்ணம் தானம் செய்யும் தன்மையை அருள்வாயாக என்று அன்னையிடம் விண்ணப்பிக்கிறார். நம் நாட்டு பாரம்பரியமும் தானம் செய்வதை யாருக்கும் தெரியாமல் செய்ய வேண்டும் என்பதே. மேலும், வலது கை தானம் செய்வது இடது கைக்கு கூட தெரிய வேண்டாம் என்றும் பெரியோர்கள் சொல்லுவது வழக்கமன்றோ! கொடை வள்ளல்கள் வாழ்ந்த பழம் பெருமையுடைத்து பாரதநாடு.

**தொலையாத நிதியமும்:** கொடையைத் தொடர்வது, “தொலையாத நிதியமும்” அதாவது ஒருவன் சம்பாதித்து சேர்த்து வைத்த பொருள் தொலைந்து போகாமல் அவனிடமே தங்க வேண்டும். அப்போது தானே, தான் எண்ணியபடி தானம் செய்ய முடியும். தொலையாத நிதி என்பதற்கு அழிவு வராத செல்வம் என்றும் பொருள் கொள்ளலாம். செல்வம் அழியாமல் இருப்பது இல்லாதவருக்கு ஈதலாகும் என்பதை உணர்ந்து வாழ வேண்டும்.

**கோணாத கோலும்:** ஒருவன் தன் சொந்த வாழ்வில் எல்லா வசதிகளும் பெற்று வளமுடன் வாழ்ந்தாலும் அவன் வாழும் நாட்டின் அரசாங்கம் (முற்காலத்தில் அரசன் என்று கொள்க) சரியாக அமையாவிட்டால் மக்களுக்கு பலவகையான துன்பங்கள் நேரிடலாம். சொத்துக்கள் பறிபோகலாம். நிலங்களின் விளைச்சல் பாதிக்கப்படலாம். நாட்டின் அமைதி குலையலாம். மக்கள் ஒருவித பயத்திலும், பீதியிலும் வாழ்வர்.

நீதி நெறி வழுவாத அரசு அமைந்தால்தான் மக்களும், அரசும் கொள்கை வேறுபாடு இல்லாமல் சமநோக்குடன் வாழ முடியும். நாட்டில் அமைதி, செல்வம், பெருமை ஏற்படும். மனுநீதிச் சோழன் போன்றோர் அரசாட்சி செய்த நாடல்லவா நம்நாடு! எனவேதான் "கோணாத கோலின்" அவசியத்தை இங்கு அன்னை முன் வேண்டுதலாக வைக்கிறார்.

**ஒரு துன்பம் இல்லாத வாழ்வும்:** மண்ணுலகில் பிறந்த அனைவரும் விரும்புவது, வேண்டுவது - ஒரு துன்பமும் இல்லாத வாழ்வேயாகும். இன்பம் இல்லாவிட்டாலும், துன்பம் மட்டும் வரவே கூடாது. இன்பத்தையும், துன்பத்தையும் ஒன்றாகவே பாவிக்க வேண்டும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும் இக்கருத்தையே வலியுறுத்துகிறார். ஆனால் இந்தப் பக்குவம் யாருக்கும் அமைவதில்லை. எங்கேயோ கோடியிலோ அல்லது லட்சத்தில் ஒருவனோ தான் 'ஞானியாக' வாழ முடியும். எனவே தான் அபிராமி பட்டரும், சாமான்யர்களுக்காக இந்த வேண்டு கோளை அன்னையிடம் சமர்ப்பிக்கிறார்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்தில், வாக்தேவதைகள்

*"தாபத்ரயாக்னி ஸந்தப்த ஸமாஹ்லாதன சந்திரிகா"* (357)

என்று அன்னையை மிக அற்புதமாக போற்றுகிறார்கள்.

அன்னை, மூன்று விதமான தாபங்கள் (துன்பம்) என்ற அக்னியால் நன்கு வாட்டப்படுபவர்களுக்கு மனமகிழ்வைத் தரும் நிலவைப் போன்றவள்.

தாபங்கள் - ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம்.

**ஆத்யாத்மிகம்:** மனம், புத்தி, அஹங்காரம், சித்தம், ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து இவை களடங்கிய சரீரத்தை ஒட்டியது.

**ஆதிபௌதிகம்:** மேலே கூறிய இந்திரியங்களின் விஷயங்களாகிய பஞ்ச பூதங்களால் ஏற்படுவது.

**ஆதிதைவிகம்:** தெய்வ இச்சையால் ஏற்படுவது.

இந்த மூன்று விதமான தாபங்கள் தான் ஸம்ஸாரம் என்பதின் லக்ஷணங்கள். இவைகளால் தவிக்கும் ஜீவனை, அன்னை தன் கருணையாகிற நிலவினால், அவனுடைய தாபத்தை நீக்கி மகிழ்விக்கிறாள்.

மேலும், (191)து:கஹந்த்ரீ - துக்கத்தைப் போக்குபவள், (192)ஸுகப்ரதா - சுகத்தைத் தருபவள், (968)ஸுககரி - சுகத்தைச் செய்பவள், (953)ஸர்மதா - நித்தியமான (நிலையான) சுகத்தைத் தருபவள், (125)ஸர்மதாயினீ - சுகத்தைக் கொடுக்கிறவள்.

சேய் தன் தாயிடம் சில சமயங்களில் நேரிடையாகக் கேட்காது. அதுபோல அபிராமி பட்டரும் 'சுகவாழ்வு தருவாய்' என்று கேட்காமல் "ஒரு துன்பமில்லாத வாழ்வு" வேண்டும் என்று கேட்கும் பாணி தெய்வீகத் தன்மையுடைத்து.

**துய்ய நின் பாதத்தில் அன்பும் உதவி:** அபிராமி அந்தாதியில் பல பாடல்களில் அன்னையின் திருவடியைப் பற்றியே பாடுகிறார் அபிராமி பட்டர். தாயின் திருவடிகளில் தவழும் சேயாகவே நமக்கு காட்சி தருகிறார்.

"அந்தரி பாதம் என் சென்னியதே!", "சென்னியது உன் பொன் திருவடித் தாமரை", "என்றும் வணங்குவது உன் மலர்த்தாள்", "கசிந்து பத்தி பண்ணியது உன் இருபாதாம் புயத்தில்" - என்றவை சில உதாரணங்கள்.

"அவன் அருளாலே அவன்தாள் வணங்கி" என்று சிவ புராணத்தில் (திருவாசகம்) மாணிக்கவாசகர் சிவபெருமானின் திருவருளை வேண்டுகிறார். சக்தியும், சிவனும் அபேதமல்லவா! அன்னையின் திருவடிகளில் அன்பும், பக்தியும், பற்றும் ஏற்பட அன்னையேதான் அருள்புரிய வேண்டும் என்பதை "துய்ய நின் பாதத்தில் அன்பும் உதவி" என்று மிக அழகாகச் சொல்வது அபிராமிபட்டரின் ஆழ்ந்த பக்தியைப் புலப்படுத்துகிறது.

ஆதிசங்கரரும் தம் சீடர்களுக்கு அளித்த உபதேசம் "ஆபதி கிம் கரணீயம்? ஸ்மரணீயம் சரணயுகளமம்பாயா:" அதாவது - ஆபத்தில் என்ன செய்ய வேண்டும்? அன்னையின் திருவடிகளையே மனத்தில் கொள்ள வேண்டும்.

அன்னையின் மென்மையான மிருதுவான திருவடித் தாமரைகள் அனைத்தையும் தரவல்லது என்று ஆணித்தரமாகச் சொல்கிறார் அபிராமி பட்டர்.

**பெரிய தொண்டரொடு கூட்டு கண்டாய்:** அபிராமி பட்டர் ஒரு சிறந்த ஸ்ரீ வித்யா உபாசகரல்லவா! ஸ்ரீ ஸ்ரீவித்யா சம்பிர தாயத்தில் ஸத்ஸங்கம் இன்றியமையான தொன்று. இதனையே 'பெரிய தொண்டரொடு கூட்டு கண்டாய்' என்று சொல்கிறார். அபிராமி அந்தாதியில்(12) "பகல் இரவா நண்ணியது உன்னை நயந்தோர் அவையத்து" என்றார்.

மேலும் அன்னை அபிராமியே ஸத்ஸங்கத்தை ஏற்பாடு செய்து விடுவாள் என்பதை பாடல் 41ல் கூறுகிறார்.

*"புண்ணியம் செய்தனமே மனமே புதுப்பூங்குவளைக்*
*கண்ணியும் செய்ய கணவரும் கூடிநம் காரணத்தால்*
*நண்ணி இங்கே வந்து தம் அடியார்கள் நடுவிருக்கப்*
*பண்ணி நம் சென்னியின் மேல் பத்மபாதம் பதித்திடவே"*

தாயுமானவரும் "அன்பர் பணி செய்ய எனை ஆளாக்கி விட்டுவிட்டால் இன்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே!" என்பார். அதாவது அன்பர்களுக்கு பணி செய்யும் பாக்கியம் எனக்கு கிடைத்துவிட்டால், மோட்சத்தைத் தேடிச் செல்ல அவசியம் இல்லை. அது தானாக வந்துவிடும்". மாணிக்க வாசகரும், "அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்" என்று பணிவன்புடன் இறைவனிடம் வேண்டுகிறார்.

ஆதி சங்கரர், பஜகோவிந்தத்தில்

*"ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்*
*நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம் |*
*நிர்மோஹத்வே நிச்சலதத்வம்*
*நிச்சலதத்வே ஜீவன் முக்தி: ||*

நல்லோர் உறவால் பற்றின்மை ஏற்படும். பற்றின்மையால் மதிமயக்கம் நீங்கும். மதிமயக்கம் நீங்கினால் மாறுபடாத உண்மை விளங்கும். மாறுபடாத உண்மை விளங்கினால் அதுவே ஜீவன் முக்தி. அபிராமி பட்டர் ஒரு ஜீவன் முக்தர் என்று சொல்லவும் வேண்டுமா? அல்லும் பகலும் அன்னையின் நினைப்பிலேயே வாழ்ந்த அனுபூதிமான் அல்லவா!

பதினாறு பேறுகளையும் சொல்லி இறுதியில் "பெரிய தொண்டரொடு கூட்டு கண்டாய்" என்று பூர்ணம் செய்வது அற்புதம்!

**அலையாழி அறிதுயிலும் மாயனது தங்கையே:** உலகமெல்லாம் நீரில் மூழ்கிய பிரளய காலத்தில், அலைகள் மோதும் கடலின் மேல் ஆலிலையில் யோகத்துயில் புரியும் மாயனுடைய (திருமாலின்) தங்கையே! என்று அன்னை அபிராமியை அன்புடன் அழைக்கிறார். அறிதுயில் என்பது தூங்காமல் தூங்கும் நிலை. அது நிர்விகல்பசமாதி என்றும் சொல்லலாம். உலகத்தை பார்ப்பது போல் தோன்றும். ஆனால் மனதில் உலக விஷயங்கள் ஒட்டாது (தாமரை இலையின் மேல் இருக்கும் நீரைப் போல).

**இராமகிருஷ்ணரது உபதேசங்களில் ஒன்று:** "இந்த உலகத்தில் நீ வாழலாம். ஆனால் உலகம் உனக்குள் வரக் கூடாது". அதாவது படகு நீரின் மேல் இருக்கலாம். ஆனால் நீர் படகுக்குள் வரக்கூடாது.

திருமாலை மாயன் என்று அழைப்பதற்கு காரணம் மகாபாரதத்தில் அவர் கிருஷ்ணனாக அவதாரம் செய்து பல மாயா லீலைகள் புரிந்தார் அல்லவா! பகவத் கீதையில்

*தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா |*
*மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே"||(7.14)*

ஸத்வ, ரஜஸ், தமோ குணமயமான இந்த தேவமாயை கடத்தற்கரியது. என்னையே சரணமென அடைபவர்களே இந்த மாயயைக் கடக்கிறார்கள்.

*அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீஶ்வரோऽபி ஸந் |*
*ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்ம மாயயா||(4.6)*

நான் பிறப்பற்றவனாகவும், அழிவற்றவனாகவும், ஸகல பூதங்களுக்கும் ஈசனாகவும் இருந்தபோதிலும் என்னுடைய

மாயையினால் என்னுடைய இயற்கையை வசமாக்கிக் கொண்டு அவதாரம் செய்கிறேன்.

*பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்மாம் ப்ரபத்யதே |*
*வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: ||* *(7.19)*

பற்பல பிறவிகள் எடுத்து, இறுதியில், "ஸகலமும் வாஸுதேவனே" என்ற ஞானம் அடைந்து என்னைச் சரணமடைகிறான். அத்தகைய மஹாத்மா கிடைத்தற்கரிதானவன்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் அன்னையை பத்மநாப ஸஹோதரீ என்று கூறப்படுகிறது. அதாவது, பத்மநாபனான விஷ்ணுவின் உடன் பிறந்தவள். பார்வதி தேவியாரும், கிருஷ்ணனின் சஹோதரி ஸுபத்ரையாக தோன்றியதாக ப்ரஹ்ம புராணம் கூறுகிறது. காஞ்சிபுரத்திலும் ப்ரும்மாவின் தவத்தால் விஷ்ணுவுடன் ஆவிர்பவித்தாள் என்றும் ஒரு வரலாறு உண்டு.

**ஆதிகடவூரின் வாழ்வே:** திருக்கடவூர் மிகவும் பழைமை வாய்ந்த ஒரு புண்யஸ்தலம். இத்தலத்திற்கு வில்வவனம், பிஞ்சிலவனம் என்ற பெயர்களும் உண்டு. ஞான உபதேசம் பெற விரும்பிய பிரமதேவன் இறைவனை வழிபட்டான். இறைவன் அவன் கையில் ஒரு வில்வ விதையைக் கொடுத்து, "இது இட்ட ஒரு முகூர்த்தத்துள் எந்த இடத்தில் முளைக்கின்றதோ அந்த இடத்தில் தங்கி எம்மை வழிபடுவாயாக!" என்று கட்டளையிட்டான். அந்த வில்வ விதையை இட்ட இடம் தான் திருக்கடவூர். பிரமதேவனும் அந்த வில்வமரத்தின் அடியில் தங்கி இறைவனை நோக்கி தவம் செய்து ஞான உபதேசம் பெற்றான். அது முதலாகத் இத்தலத்திற்கு வில்வ வனம் என்றும், மூர்த்திக்கு வில்வவனேசுவரர் என்றும் திருநாமங்கள் வழங்கிவரலாயின.

எனவே இத்தலம் தோன்றிய காலம், வரலாறு காண முடியாததொன்று. இதைக் கருத்திலே கொண்டுதான் அபிராமி பட்டர் "ஆதிகடவூர்" என்று இத்தலத்தின் பெருமையை அழகாக வெளிப்படுத்துகிறார். இவ்வாறு புராதனப் பெருமை பெற்ற திருக்கடவூரின் உயிர் நாடியாய் விளங்குகிறாள் அன்னை அபிராமி! வாழ்நாளில் ஒரு தடவையாவது திருக்கடவூர் மண்ணை மிதிப்பவருக்கு ஒரு தீங்கும் வராமல் ஆனந்த வாழ்வு அமையும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை! "ஆதிகடவூரின்

வாழ்வே" என்று ஏகாரத் தேற்றமாய் சொல்கிறார் அபிராமி பட்டர். (அவர் ஜீவன் முக்தி அடைந்த க்ஷேத்திரம்)

**அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி:** தேவர்கள், தாங்கள் பெற்ற அமிர்தத்தை ஒரு கடத்தில் அடைத்து அதைப் பின் பருகலாம் என்று எண்ணி இத்தலத்தில் ஒரு இடத்தில் வைத்து விட்டுச் சென்றனர். திரும்பி வந்து பார்க்குங்கால் அக்கடமே சுயம்பு லிங்கமாகக் காணப்பட்டது. இக்காரணத்தினால், ஈசனுக்கு அமிர்தகடேஸ்வரர்' என்றும், "அமுதீசர்" என்றும் நாமாக்கள் ஏற்பட்டன.

அன்னை எப்போதும் ஈசனை விட்டுப் பிரியாமல் இருக்க செய்த வல்லபம் - அவள் ஈசனின் இடப்பாகத்தை தனதாக்கிக் கொண்டு அவரிடமிருந்து என்றும் அகலாமல் இருக்கும் நிலை. இதையே அபிராமி பட்டர், "முன் பார்த்தவர் தம் மதிசயமாக வன்றோ வாம பாகத்தை வவ்வியதே" என்று அபிராமி அந்தாதியில்(17) அன்னையின் பராக்கிரமத்தை பெருமையுடன் பறைசாற்றுகிறார்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்(970) ஸுவாஸினீ - பதியுடன் கூடிவாழ்பவள். பதியுடன் வாழ்வதே பெண்களுக்கு சிறப்பு என்பதை, தானே உதாரணமாக நின்று வழிகாட்டுகிறாள். மேலும் ஸுவாஸினிகள் செய்யும் அர்ச்சனையால் மகிழ்ச்சியடைகிறாள். அதுமட்டுமல்லாது ஸுவாஸினிகளை பூஜை செய்யும் அன்பர்களிடம் அன்பு கொள்கிறாள். இதை "ஸுவாஸின்யர்சன ப்ரீதா" என்று அடுத்து வரும் நாமாவினால்(971) அறிகிறோம்.

தேவி பூஜையின் முக்யமான அம்சங்களில் ஸுவாஸினி பூஜை ஒன்று. இதை நன்கு உணர்ந்த அபிராமி பட்டர் எல்லா ஸ்திரீகளையும் அன்னையாகப் பாவித்து அவர்களின் திருவடிகளுக்கு பூஜை செய்தவர் என்று தெரியவருகிறது. இதைத்தான், ஸ்ரீ தேவீ மாஹாத்யம் சொல்கிறது.

*"வித்யா: ஸமஸ்தாஸ் தவ தேவி பேதா:*
*ஸ்த்ரிய: ஸமஸ்தா: ஸகலா ஜகத்ஸு"* *(11.6)*

**பொருள்:** உலகிலுள்ள அனைத்து ஸ்த்ரீகளும் அம்பாளே எனப்படுகிறது. ஆகையால் ஸுவாஸினிகளை அர்ச்சிப்பது அம்பாளை அர்ச்சிப்பதாகும்.

**சுகபாணி:** சுக - என்றால் கிளியைக் குறிக்கும். சுகபாணி என்பது அன்னை அபிராமியும் மதுரை மீனாட்சி போன்று கிளியை தன் திருக்கரத்தில் வைத்திருக்கிறாள். கிளி சீவர்களைக் குறிக்கும். கருணை உள்ளம் கொண்டு சீவர்களின் மனம் வேறு எங்கும் சென்று அலையாமல் இருக்க அவர்களைக் கிளி வடிவத்தில் கொண்டு தன்னிடமே தக்க வைத்துக் கொண்டு இருக்கிறாளாம். இதுதானே தாயன்பின் உச்சநிலை. "ஸ்ரீமாதா" - "சிறப்பு மிக்க அன்னை" என்று ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் தொடங்குவது காண்க!

**மற்றுமொரு விளக்கம்:** அன்னையின் திருக்கரத்தில் இருக்கும் கிளியானது ஸதா சிவனின் திருநாமங்களைச் சொல்லி கொண் டிருக்குமாம். அன்னைக்கு தன் பதியின் திருநாமங்களை கேட்டு கொண்டிருப்பதுதானே மிக்க ஆனந்தத்தைத் தரும். பதிவிரதைகள் தங்கள் கணவரின் பெயரைத் தங்கள் வாயினால் சொல்லமாட்டார்கள்! (இப் பழக்கம் இன்றும் நம் கிராமப் புறங்களில் காணலாம்)

மேலும் கிளியானது தனக்கு சொல்லிக் கொடுத்ததை அப்படியே திருப்பிச் சொல்லும். (வார்த்தை மாறாது) அதுபோல் ஜீவர்களும் குரு வடிவில் வந்த அன்னையின் திருநாமங்களைச் சொல்ல வேண்டும் என்பதே இதன் உட்பொருள்.

அபிராமி பட்டர் முதலில் திருமாலுடைய தங்கை (பிறந்த வீடு) என்று சொல்லி பின் "அமுதீசர் ஒரு பாகம் அகலாத சுகபாணி" (புகுந்த வீடு) என்று கூறுவது மிகுந்த காவ்ய ரசனையுடைத்து.

**அருள்வாமி! அபிராமியே:** "அன்னை அபிராமியே! அனைத்தையும் அருள்வாயாக!" என்று அபிராமி பட்டர் அனைவருக்காகவும் அன்னையிடம் பிரார்த்தனை செய்யும் அரிய காட்சி நம் கண்முன் வந்து நிற்கின்றது. "வாமம்" என்பது இடப்பாகத்தைக் குறிக்கும். "வாமி" - என்றால் இறைவனின் இடப்பாகத்தில் இருக்கும் இறைவியைக் குறிக்கும் என்று சிலர் கூறுவர். 'வாமி' என்பதற்கு துர்க்கை, உமையம்மை என்று தமிழ் அகராதி கூறுகிறது.

அபிராமி பட்டர் ஒரு சிறந்த அனுபூதிமான்! ஸ்ரீ வித்யா உபாசகர்! அனைவரையும் அன்னை அபிராமியாக பாவித்தார் என்பதை மறக்கலாகாது. "பார்க்கும் திசைதொறும்"(85) என்னும்

பாடலில், "எங்கு நோக்கினும் அன்னை அபிராமி காட்சியளிக்கிறாள்" என்று அவர் பணிவுடன் கூறுவது நம்மைப் பரவசத்தில் ஆழ்த்துகிறது.

திருக்கடவூரில் அன்னை அபிராமி சந்நிதியில் இருந்துக் கொண்டே அன்னையின் அனைத்து திருக்கோலங்களையும், திருநாமங்களையும் அகக்கண்ணில் கண்டு ஆனந்தம் கொண்ட அதிசய, அற்புத மகான். மண்ணுலகிற்கு, "அபிராமி அந்தாதியை" அருளுவதற்காக அபிராமிபட்டரை படைத்தாளோ அன்னை என்ற நினைப்புத்தான் நெஞ்சிலே நிற்கிறது! வாழ்க அபிராமி பட்டர்! வாழ்க அபிராமி நாமம்!

## ௨. அன்னை அபிராமியின் கேசாதிபாத வர்ணனை

*காரளக பந்தியும் பந்தியின் அலங்கலும்*
*கரிய புருவச் சிலைகளும்*
*கர்ண குண்டலமு(ம்) மதிமுக மண்டலம் நுதற்*
*கத்தூரிப் பொட்டும் இட்டுக்*
*கூர் அணிந்திடுவிழியும் அமுத மொழியும் சிறிய*
*கொவ்வையின் கனி அதரமும்*
*குமிழ் அனைய நாசியும் குந்தநிகர் தந்தமும்*
*கோடு சோடான களமும்*
*வார் அணிந்து இறுமாந்த வனமுலையும் மேகலையும்*
*மணி நூபுரப் பாதமும்*
*வந்து எனது முன்னின்று மந்தகாசமுமாக*
*வல்வினையை மாற்றுவாயே*
*ஆரமணி வானிலுறை தாரகைகள் போல நிறை*
*ஆதிகடவூரின் வாழ்வே!*
*அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!*
*அருள்வாமி! அபிராமியே!*

வானத்தில் உள்ள நட்சத்திரங்கள் போன்று பிரகாசிக்கும் மணிகள் பதித்த மாலைகள் நிறைவாக அணிந்து திருக்கடவூரின் உயிராய் விளங்குபவளே! அமுதீசரின் இடப்பாகம் ஒரு பொழுதும் அகலாதவளே! கிளியைத் தன் திருக்கரத்தில் ஏந்தியவளே! அருளைப் பொழியும் அபிராமியே!

**கார் அளக பந்தி** - மேகம் போன்று கருமை நிறம் கொண்ட சுருள் சுருளான கூந்தலும்.

இப்பாடலில் அபிராமி பட்டர் அன்னை அபிராமியை கேசாதி பாதமாக மிக்க கவிநயத்துடன் வர்ணிப்பது நமது உள்ளத்தில் அளவிலா ஆனந்தத்தை அளிக்கிறது.

வைஷ்ணவ சம்பிரதாயத்தில் திருமாலை பாதாதிகேசமாக வர்ணிப்பார்கள். இங்கு அன்னைய கேசாதிபாதமாக வர்ணிப் பதற்கு காரணம் யாது? இதற்கு பதில் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் தருகிறது. அதில் 4. சிதக்னி குண்ட ஸம்பூதா - ஞானமாகிற யாக குண்டலத்தில் இருந்து தோன்றியவள். அக்னி குண்டலத்தி லிருந்து மேலே அன்னை வரும்போது - முதலில் தெரிவது கருமை நிறம் கொண்டு அழகாகத் தோன்றும் அவளுடைய கூந்தல் தானே! இதனை நீலசிகுரா(185) என்று வாக்தேவதைகள் வர்ணிக்கிறார்கள். ஸ்ரீ லலிதா த்ரிசதீ(150) கசஜிதாம்புதா - நீருண்ட மேகத்தைப் பழிக்கும் கூந்தலையுடையது.

அபிராமி அந்தாதியில் - "பிச்சிமொய்த்த கன்னங் கரிய குழலும்"(53), "கனந்தரும் பூங்குழாள்"(69) என்றும் வரும்.

அன்னையின் கருமையான கூந்தலின் அழகை வர்ணிக்காத மகான்களும், கவிகளும், புலவர்களும் இல்லை.

அன்னையின் கருமை நிறம் கொண்ட கூந்தலின் சிறப்பு என்ன? அதன் தத்துவம் யாது? இதோ, ஆதிசங்கரர், ஸௌந்தர்ய லஹரீயில் "துனோது த்வாந்தம்"(43) என்று ஆரம்பிக்கும் ஸ்லோகத்தில் விளக்குகிறார்.

"பரம சிவ பத்தினியே! மலர்ந்த கறுநெய்தல் காடுபோல் பிரகாசிப்பதும், அடர்ந்தும், வழவழப்பாகவும், மிருதுவாகவும் உள்ளதுமாகிய உன்னுடைய கேசபாரம் எங்களுடைய அக இருளை போக்கடிக்கட்டும்." அதாவது, அம்பாளுடைய கரிய கூந்தல் - அதைத் தியானிக்கும் அடியார்களுடைய உள்ளத்தில் இருக்கும் அஞ்ஞான இருட்டையும் மலின வாசனைகளையும் நீக்கி உள் ஒளியையும், ஸத்வாசனையும் வளர்க்கும், ஸர்வ ஐயத்தையும் உண்டாக்கும்.

**பந்தியின் அலங்கலும்:** அக்கூந்தலில் விளங்கும் மலர்களும் அல்லது பூமாலைகளும். நம் நாட்டுப் பெண்டீர் கூந்தலில் மலர் அணிவது தொன்று தொட்டு வரும் வழக்கம் அன்றோ!

**கரிய புருவச் சிலைகளும்:** வில் போன்ற கரிய புருவங்களும். புருவங்கள் கருமையாக இருப்பதும் யௌவனத்தைக் குறிக்கும்.

அன்னை என்றும் இளமை மாறாதவள். திருமூலரும், "கொலைவிற் புருவத்தள்" (திருமந்திரம்-1050) என்பர். அதாவது கொல்லும் வில் போன்று வளைந்த புருவம் உடையவள்.

ஆதிசங்கரர் அன்னையின் புருவங்களை மன்மதனுடைய வில்லுக்கு ஒப்பிடுகிறார். அன்னையின் புருவத்தை மன்மத னுடைய வில்லாகத் தியானிப்பதால் காமஜெயம் ஏற்படும் என்று உலக மக்களுக்கு உணர்த்துகிறார்!

**கர்ண குண்டலமும்:** அன்னை தனது இருகாதுகளிலும் குண்டலங்களை அணிந்திருக்கிறாள். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் "தாடங்க-யுகளீ-பூத-தபனோடுப-மண்டலா"(22). சூரியன், சந்த்ரன் இவர்களை இரு காதுகளில் தாடங்கங்களாய் அணிந்து கொண்டிருப்பவள். (தாடங்கம் - காதணி) அபிராமி பட்டர் சொன்ன வாக்கைக் காப்பாற்ற அன்னை தனது இடது காதிலிருந்து, சந்திரனாகத் திகழும் தாடங்கத்தை வானில் வீசி எறிய அது பதினான்கு புவனங்களுக்கும் பௌர்ணமியாக ஜொலித்தது! ஸுமங்கலிகளுக்கு தாடங்கம் ஒரு ஸௌபாக்ய மான அணி. ஸௌந்தர்யலஹரீயில், "ஹாலஹாலம் என்ற கொடிய விஷத்தை உண்ட பரமேசுவரன்தன் உயிருக்கு ஒரு தீங்கும் ஏற்படாதிருப்பதற்கு அன்னையின் தாடங்க மஹிமை தான் காரணம் என்று ஆதிசங்கரர் ஆச்சர்யத்துடன் வர்ணிக்கிறார்.

**மதிமுக மண்டலம்:** ஒளி வீசும் முகமாகிய சந்திர மண்டலமும், ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் அன்னையை, ராகேந்து வதனா(314). என்று மிக அழகாகச் சொல்லுகிறது. அதாவது, பூர்ண சந்திரன் போன்ற முகத்தை உடையவள். அன்னை அபிராமியை பௌர்ணமியாக தன் அகக் கண்ணில் கண்டவர் அபிராமி பட்டர். அதனால் தானே மன்னன் சரபோஜியிடம், இன்று பௌர்ணமி என்று கூறினார். அன்னை வானில் பௌர்ணமியாகக் காட்சி தந்தவுடன், "தன்னை உள்ள வண்ணம் காட்டியவா!"(80) என்று ஆனந்தக் களிப்பில் கூத்தாடுகிறார்.

**நுதற் கத்தூரி பொட்டும் இட்டு:** அழகிய நெற்றியில் கஸ்தூரித் திலகமும் அணிந்தவள் அன்னை. இதனை வெகு அழகாகவும், கவிநயத்துடன் வர்ணிக்கிறார்கள் வாக்தேவதைகள். 16. முகசந்த்ர - கலங்காப - ம்ருகநாபி - விசேஷகா: சந்திரனிடம் தோன்றும் களங்கம் போன்று முக மண்டலத்தில் விளங்கும்

கஸ்தூரிப் பொட்டுடையவள். அதாவது, களங்கமானது அம்பாளை அடையும்போது களங்கமற்றதாகி விடுகிறதல்லவா!

அபிராமி பட்டர் அபிராமி அந்தாதியை, "உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகம்" என்று தானே ஆரம்பிக்கிறார். ஸிந்தூர திலகாஞ்சிதா(632) - நெற்றியில் சிந்தூரப் பொட்டு அணிந்தவள் (சிந்துரானன சுந்தரியே).

**கூர் அணிந்திடு விழியும்:** கூர்மையான பார்வை கொண்ட இரு விழிகளும். அன்னை அகிலாண்டத்தையும் படைத்தவள். அவளை ஆப்ரஹ்ம கீட ஜனனீ(285) என்று வாக்தேவதைகள் அழைக்கிறார்கள். ப்ரஹ்மா முதல் புழு, பூச்சி வரை உள்ள எல்லா ஜீவன்களையும் ஈன்றவள். அனைத்து ஜீவராசிகள் மீதும் அவள் கருணையான பார்வை விழ வேண்டுமன்றோ! அதனால் அவள் பார்வை என்றுமே மங்காமல் கூர்மையாக உள்ளது!

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம், ஸ்ரீ லலிதா த்ரிசதீ, ஸௌந்தர்ய லஹரீ போன்ற நூல்கள் அன்னையின் கண்களின் அழகை பலவிதமாக வர்ணிக்கிறது. திருமூலரும், "அம்பன்ன கண்ணி" (1147) என்பர்.

மானின் கண்கள் ஓரிடத்தில் நிலைத்து நிற்காது. அதனுடைய பார்வை ரொம்பவும் கூர்மையானது. அதுபோல அன்னையின் பார்வை - தன் கனிவுடன் கூடிய க்ருபை எல்லா பக்தர்கள் மீதும் விழட்டும் என்ற காரணத்தினால்.

*ம்ருகாக்ஷீ (561. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்) ஸ்ரீ லலிதா த்ரிசதீ 103 - "ஹரிணே க்ஷணா" - மான் விழியாள்.*

"உழையைப் பொரு கண்ணும்" என்று அபிராமி அந்தாதி பூரணமாகும் 100-வது பாடலில் முடிவாக அபிராமி பட்டர் சொல்வது அன்னையின் கடைக்கண் பார்வை தான் அனைத்து ஜீவராசிகளுக்கும் முக்தியைத் தரவல்லது என்பதை சூசகமாக உணர்த்துகிறது!

அன்னை திருக்கண்களின் கடாக்ஷம் பற்றி ஸ்ரீ வேதாந்த தேசிகர் ஸ்ரீ ஸ்துதியில் வெகு அழகாகக் கூறுகிறார்.

*" ஆர்த்த த்ராண வ்ரதி பிரம்ரு தாஸார நீலாம்பு வாஹைஹ:*
*அம்போஜாநா முஷஸி மிஷதாமந்த ரங்கை ரபாங்கை: |*

*யஸ்யாம் யஸ்யாம் திசி விஹரதே தேவி த்ருஷ்டிஸ்த்வதீயா*
*தஸ்யாம் தஸ்யாமஹமஹமிகாம் தந்வதேஸம்பதோகா: ||"*

**பொருள்:** தேவியே, வாழ்க்கையில் நொந்து போனவர்களைக் காப்பதையே உன் விரதமாகக் கொண்டவையும், அமுத மழை பொழியும் நீல மேகங்களாகத் திகழ்பவையும், காலையில் மலர்கின்ற கமல மலர்கள் போன்ற உன் திருக்கண்களின் கடாக்ஷம், எந்த திசையிலெல்லாம் சென்று விளையாடுமோ, அங்கெல்லாம் செல்வங்கள் போட்டியிட்டு வெள்ளமிடுகின்றன.

**அமுத மொழியும்:** அமுதம் போன்ற இனிய சொல்லையும் உடையவள். அன்னையின் இனிய மொழியினை "பண்ணளிக்கும் சொல் பரிமள யாமளைப் பைங்கிளியே!", "கடம்பாடவியில் பண் களிக்கும் குரல் வீணையும்" என்று அபிராமி அந்தாதியில்(15,70) வருவது காண்க. அதாவது பண்களைப் (இராகங்கள்) போல இனிமையைத் தரும் திருவாய் மொழி. கடம்ப வனத்தில் (மீனாட்சி ஆட்சி செய்யும் மதுரை என்றும் கொள்ளலாம்) பண்கள்ளெல்லாம் அவளுடைய குரலை கேட்டு "ஆகா என்ன இனிமை என்று களிப்பதற்குரிய குரலாகிய வீணை" என்பது மறைமுகமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அன்னையின் (சொல்லில் வர்ணிக்க முடியாது) இனிமையான குரல் வீணையின் நாதத்திற்கும் மேற்பட்டது. இக்கருத்தினை ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்(27) நிஜ ஸல்லாப மாதுர்ய விநிர்பர்த்ஸித கச்சபீ என்று வெளிப்படுத்துகிறது - தன்னுடைய பேச்சின் இனிமையினால் கச்சபீ எனப்படும் ஸரஸ்வதி தேவியின் வீணையின் நாதத்தையும் வென்றவள்.

ஸௌந்தர்யலஹரீ (66-விபஞ்ச்யா காயந்தீ) அன்னையின் வாக்கினிமையை வெகு அழகாக விளக்குகிறது. ஸரஸ்வதி தேவி, ஸ்ரீ ராஜராஜேஸ்வரி தர்பாரில் வீணை வாசிக்கும்போது அதன் இனிமையை ரசித்த அன்னை "ஸபாஷ்" என கூற ஆரம்பிக்கும்போதே, அந்த சொல்லின் இனிமையினால் வெட்கி தன் வீணையை உறையிலிட்டு மூடினாளாம். என்னே! ஆதிசங்கரரின் கவிதாவிலாஸம்!

**சிறிய கொவ்வையின் கனி அதரமும்:** சிறிய கொவ்வைப் பழம் போன்ற இதழ்களும் கொண்டவள். அமுத மொழியினை அடுத்து அதற்கு ஆதாரமான கனி அதரத்தைச் சொல்வது மிகப்

பொருத்தமாய் உள்ளது. திருமூலரும் "கம்பலைச் செவ்வாய்" என்பார். அதாவது ஒலிக்கு உயிர்தரும் சிவந்த வாயும். மாணிக்க வாசகரும் "கனிதரு செவ்வாய் உமையொடு" என்பர் - கொவ்வைப் பழம் போன்ற சிவந்த வாயையுடைய உமாதேவியார்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்(24) நவவித்ரும - பிம்பஸ்ரீ - ந்யக்காரி - ரதனச்சதா - புதிதான பவழத்தினும், கோவைப் பழத்தினும் சிறந்த காந்தி பொருந்திய உதடுகளையுடையவள்.

தேவியின் உதடுகள் இயற்கையாகவே செம்மையானது. செம்மையான பொருட்களில் சிறந்தவை பவழமும், கோவைப் பழமும். இவை இரண்டையும் வெல்லும் படியான சிவப்பான அதரங்கள் அன்னைக்கு. இதே கருத்தினை, ஆதிசங்கரர் ஸௌந்தர்யலஹரீ 62-ம் ஸ்லோகத்தில் சொல்கிறார். (ப்ரக்ருத்யா ஆரக்தாயா)

அன்னையின் அதரங்களை, "பவளக் கொடியிற் பழுத்த செவ்வாயும்" என்று அபிராமி அந்தாதியில் வருவதும் காண்க.

**குமிழ் அனைய நாசியும்:** குமிழம்பூ போன்ற மூக்கினை உடையவள். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம்(19) நவசம்பக புஷ்பாப நாஸாதண்ட விராஜிதா - அன்றலர்ந்த சம்பகப் பூ போன்ற அழகிய மூக்குடையவள்.

**குந்தநிகர் தந்தமும்:** வெண் குருத்து போன்ற அழகான பற்களை உடையவள். மாணிக்க வாசகரும் "முத்தன்ன வெண்ணகையாய்" என்பார். அப்பரும் "தவள வெண் நகையாள்" என்று கூறுகிறார். அபிராமி பட்டரும் அபிராமி அந்தாதி(100), "வெண்ணகையும்" என்கிறார். அன்னையை, "முத்துப்போல் பல் அழகி" என்று கூறலாமா!

**கோடு சோடான களமும்:** சங்கிற்கு உவமை சொல்லக்கூடிய கழுத்தும். (கோடு-சங்கு, சோடான-ஒப்பான, களம்-கழுத்து) ஆதிசங்கரர், ஸௌந்தர்யலஹரீயில் (புஜாச்லேஷாந்-68) அன்னையின் கழுத்து, முகம் என்கிற தாமரைக்கு அழகான காம்பாய் உள்ளது என்கிறார்.

**வார் அணிந்து இறுமாந்த முலையும்:** கச்சை அணிந்து, பெருமிதத்துடன் வனப்பு மிகுந்த தனங்களைக் கொண்டவள். அன்னை அகிலாண்டத்தையும் ஈன்ற தாயார் அல்லவா!

அனைவருக்கும் தன் கருணை மிக்க ஞானப்பாலை ஊட்டு வதற்குத் தயாராக, தயாபரியாகக் காத்திருப்பவள். தளராத திருத்தனங்களை உடையவள்.

அபிராமி அந்தாதியில்(9) "கருத்தன எந்தை தன் கண்ணன வண்ணக் கனகவெற்பிற் பெருத்தன பால் அழும் பிள்ளைக்கு நல்கின பேரருள் கூர் திருத்தன பாரமும்" என்று வருவது அன்னை திருஞான சம்பந்தருக்கு தன் ஞானப் பாலை அளித்ததை நினைப்பூட்டுகிறதல்லவா! அன்னையின் திருத்தனங்கள் - கருணை, ஞானம், அருள், அன்பு ஆகியவற்றின் இருப்பிடம் (பொக்கிஷம்)

ஆதிசங்கரர், இந்தக் கருத்தினை மிகத் துல்லியமாக, காவ்ய ரஸனையுடன் ஸௌந்தர்யலஹரீயில் மூன்று ஸ்லோகங்களில் (72, 73, 75) சொல்கிறார்.

**அதன் சாராம்சம்:** அன்னையின் நகில்களில் சுரக்கும் பால் அமிருதரஸம் போன்றது. சாதாரண பால் அன்று. காமத்தை அழித்து, மோட்சத்தை அளிக்க வல்லது, கணபதியும், குமரனும் உன் பாலைப் பருகி, காம சுகம் இன்னது என்று கூட அறியாதவர்களாய் இருக்கிறார்கள். எவ்வளவோ வயது கடந்த வர்கள் ஆயினும் அவர்கள் குழந்தைகளாகவே இருக்கின்றனர்.

கருணை உள்ளம் கொண்ட உன்னால் அளிக்கப்பட்ட பாலை அருந்திய ஒரு திராவிடக் குழந்தை (திருஞான சம்பந்தர் சீர்காழி) தலை சிறந்த கவிகளுக்குள் மனதைக் கவரும் கவிஞனாக ஆகிவிட்டான் அன்றோ!

அதாவது அன்னையின் முலைப்பால் இருதயத்திலிருந்து உதித்த அமிருதப் பிரவாகம் போலும், வாக்தேவதையான ஸரஸ்வதியே அவ்வுருக் கொண்டு வந்தாற்போலும் பெருகுகிறது என்று கருதுகிறேன் என்று ஆதிசங்கரர் அழகாகச் சொல்கிறார்.

அபிராமி அன்னையைத் தன் தாயாகக் கருதி, அத்தாயின் முலைப்பாலை பருகுவதற்கு ஏங்கும் சேயாக நம் கண் முன்னில் நிற்கிறார் அபிராமி பட்டர். (இதை பின்னும் வரும் அபிராமி அம்மை பதிகத்தில் பார்க்கலாம்!)

**மேகலையும்:** அன்னை தனது மெல்லிய இடையில் பல வடங்களையுடைய மேகலாபரணம் என்ற ஒட்டியாணம்

அணிந்தவள். அன்னை அணிந்திருப்பது 32 வடங்களால் ஆகிய "விரிசிகை" என்னும் மேகலாபரணம். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம்(312) ரணத்கிங்கிணி மேகலா - சலங்கைகள் ஒலிக்கும் ஒட்டியாணம் அணிந்தவள்.

ஸௌந்தர்யலஹரீ(7) "க்வணத்-காஞ்சீ-தாமா" - சலங்கைகள் கிலுகிலுக்கின்ற தங்க ஒட்டியாணம் பூண்டவள்.

**மணிநூபுரப்பாதமும்:** மணிகள் பதித்த சிலம்பை தனது திருப்பாதங்களில் அணிந்துள்ளாள் அன்னை.

திருமூலர் - திருமந்திரத்தில் (1049) "தாளணி நூபுரம்" என்பர். இங்கு அன்னையை அகிலமனைத்தையும் ஆளும் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியாகக் காண்கிறார்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்(46) ஸிஞ்ஜான - மணி - மஞ்ஜீர - மண்டித ஸ்ரீபதாம்புஜா - ஒலிக்கும் இரத்தினப் பரல்கள் கொண்ட சிலம்புகளால் விளக்கமுறும் அழகிய பாதங்களையுடையவள். (51) ஸர்வாபரண பூஷிதா - எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றவள்.

வாக்தேவதைகள் கேசாதிபாதமாக அன்னையின் ஸ்தூல ரூபத்தை வர்ணிப்பது போல் அபிராமிபட்டரும் வர்ணித் துள்ளதைக் காணும்போது, "அன்னையின் அவதாரமோ அபிராமி பட்டர்" என்ற எண்ணத்திலே நம் மனம் நின்று விடுகிறதல்லவா! (வாக்தேவதைகள் அன்னையின் அங்கங்கள் என்று பெரியோர் கூறுவர்)

**வந்து எனது முன்னின்று மந்தகாசமும் ஆக வல்வினையை மாற்றுவாயே!**

அடியேன் உன்னை வர்ணித்தபடியே, நீ புன்னகையுடன் வந்து என் முன் நின்று என்னுடைய கொடிய வினைகளை அகற்றி என்னை ஆட்கொள்ள வேண்டும்.

அபிராமி அந்தாதி(8) "சுந்தரி எந்தை துணைவி என் பாசத் தொடரையெல்லாம் வந்தரி...." என்று வேண்டுவார் அபிராமி பட்டர். மீண்டும் பாடல் ஒன்பதில் - "கருத்தன எந்தை... நீயும் அம்மே வந்தென் முன் நிற்கவே" என்பர்.

ஆதிசங்கரர் ஸௌந்தர்யலஹரீ 7-வது ஸ்லோகத்தில் (க்வணத் காஞ்சீ தாமா) அன்னையின் எழில்மிகு வடிவத்தையும், ஆபரணங்களையும், ஆயுதங்களையும் வர்ணித்த பின்னர், அன்னையை நீ எங்களுக்கு முன் வந்து காட்சி தந்து அருள்புரிய வேண்டும் என்று வேண்டுகிறார் உரிமைக்குரலோடு!

### 3. அன்னையின் விழியருள்

*மகரவார் குழைமேல் அடர்ந்து குமிழ் மீதினில்*
*மறைந்து வாளைத் துரத்தி*
*மைக்கயலை வென்றநின் செங்கமல விழியருள்*
*வரம் பெற்ற பேர்கள் அன்றோ?*
*செகமுழுதும் ஒற்றைத் தனிக்குடை கவித்து மேல்*
*சிங்காதனத்தில் உற்றுச்*
*செங்கோலும் மநுநீதி முறைமையும் பெற்று மிகு*
*திகிரி உலகு ஆண்டு பின்பு*
*புகர்முகத்து ஐராவதப் பாகன் ஆகிநிறை*
*புத்தேளிர் வந்து போற்றிப்*
*போக தேவேந்திரன் எனப் புகழ விண்ணில்*
*புலோமசையொடும் சுகிப்பர்*
*அகரமுதல் ஆகிவளர் ஆனந்த ரூபியே!*
*ஆதிகடவூரின் வாழ்வே!*
*அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!*
*அருள்வாமி! அபிராமியே!*

ஆனந்தமே வடிவாய் கொண்டு, புராதன திருக்கடவூரின் உயிராய் விளங்கும் அபிராமியே! அமுதீசரின் இடது பாகத்தை விட்டு அகலாதவளே! கிளியை தன் திருக்கரத்தில் ஏந்தியிருப் பவளே! அருளைப் பொழிபவளே! அபிராமியே!

அட்சரங்கள் 'அ' என்ற எழுத்தில் ஆரம்பிக்கின்றன. ஓங்காரத்தின் முதல் எழுத்தும் 'அ'-ஆக அமைகின்றது. எவ்வாறு எழுத்துக்களுக்கு அகரம் மூலமாகின்றதோ அதுபோல அனைத்துயிர் களுக்கும் முதலாகி நிற்பவள் அன்னை அபிராமியே! திருவள்ளு வரும், திருக்குறளை,

"*அகர முதல எழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு.*" என்று தானே தொடங்குகிறார்.

எழுத்துகளெல்லாம் 'அ' என்னும் எழுத்தைத் தமக்கு முதலெழுத்தாகக் கொண்டுள்ளன. அதுபோல, உலகத்து உயிர்கள் கடவுளைத் தமக்கு முதலாகக் கொண்டுள்ளன.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்(489) அக்ஷமாலாதிதரா - அக்ஷமாலையைத் தரித்திருப்பவள். அதாவது "அ" முதல் "க்ஷ" வரையிலுள்ள எழுத்துக்களை அக்ஷமாலை என்பார்கள் (மொத்தம் 51 அட்சரங்கள்) திருக்கடவூர் வாழ் அன்னை அபிராமியின் வலது மேல் கையில் அக்ஷமாலை உள்ளது.

**நின் செங்கமல விழி :** அன்னையின் கண்கள் காதுவரை நீண்டிருக்கும். வாளின் கூர்மையையும் ஒளியையும் வென்று விடுகின்றன. அன்னையின் கரு விழிகள் கண்ணுக்கு மகளிர் இடும் மையையும் (அஞ்சனம்) தோற்கடிக்கச் செய்து விடுகின்றன. மீன்களும் தோற்றுப் போகின்றன.

அன்னையின் திருவிழிகள் - மகர மீன்கள் போன்ற காதணிகள் மேல் (**மகரவார் குழை மேல்**) பொருந்திய திரண்ட கூந்தலில் மறைந்து விடுகின்றன (**அடர்ந்து குமிழ் மீதினில் மறைந்து**).

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்(601) தராந்தோளித தீர்காக்ஷீ - சிறிது சலிக்கும் நீண்ட கண்களை உடையவள். 547 பந்துராலகா - அலைகள் போல் சுருண்ட முன் நெற்றி மயிருடையவள். (பர்ப்பராலகா என்ற பாடமும் உண்டு) அருணகிரிநாதரும், திருப்புகழில் "மகர குண்டலமீதே மோதுவது" - என்பர். திருமாலுக்கும் "மகர நெடுங்குழை காதர்" என்ற பெயர் உண்டு.

**வாளைத் துரத்தி:** இங்கு 'வாள்' என்பதற்கு கத்தி என்று பொருள். அன்னையின் விழிகள் கத்தியின் கூர்மையை வென்று விடுகின்றன. சென்ற பாடலிலும்," கூர் அணிந்திடு விழியும்" என்று கூறினார் அல்லவா. திரு ஆக்கூர் அம்மனுக்கு, "வாள் நெடுங் கண்ணி" என்று பெயர். (அதாவது வாளின் நீண்ட தன்மையையும் வென்றுவிடுகிறது)

**மைக்கயலை வென்ற:** இங்கு மையையும், கயலையும் தனித்தனியாக எடுத்துக் கொண்டு பொருள் சொல்ல வேண்டும். மை என்றால் மசி. மகளிர் கண்களுக்கு அழகு செய்ய இடும்

அஞ்சனம். அன்னையின் கருவிழிகள் இந்த அஞ்சனத்தையும் மிஞ்சுகின்றன. கயல் என்றால் கெண்டை மீன். வாக்தேவிகள் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் - 18. வக்த்ரலக்ஷ்மீ பரிவாஹசலன் மீனாபலோசனா - முகத்தின் அழகாகிய வெள்ளத்தில் ஓடும் மீன்களையொத்த கண்களையுடையவள் என்று வர்ணிக்கிறார்கள்.

மீன்கள் தங்கள் குஞ்சுகளுக்கு பாலூட்டி வளர்ப்பதில்லை. ஆனாலும் மீன்கள் தங்கள் குஞ்சுகளை வாத்ஸல்யத்தோடு கூடிய பார்வையினாலேயே வளர்ப்பதாக ஒரு நம்பிக்கை. அவ்வாறே அன்னையின் கண்கள் தன் பக்தர்களை கனிவுடன் பார்ப்பதாலேயே அவர்களை உய்விக்கின்றன! அன்னையை "மீனாட்சி" என்று அழைப்பதும் இதன் பொருட்டுதானே!

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் அன்னையை பத்மநயனா(247), ராஜீவ லோசனா(308), புஷ்கரேக்ஷணா(805) என்று போற்றுகிறது. இந்த நாமாக்கள் யாவும் அன்னை - தாமரை போன்ற கண்களையுடையவள் என்பதைக் குறிக்கிறது. மேலும், அதிலேயே, 432, மத கூர்ணித ரக்தாக்ஷீ - ஆனந்தக் களிப்பால் சுழலும் சிவந்த கண்களுடையவள் என்றும் வரும்.

ஆதிசங்கரர் ஸௌந்தர்யலஹரீயில் பல ஸ்லோகங்களில், அன்னையின் கண்களின் அழகையும், பெருமையையும் மிகுந்த காவ்யரசத்துடன் அற்புதமாய் வர்ணிக்கிறார். குறிப்பாக, 56வது ஸ்லோகத்தில் (தவாபர்ணே கர்ணே) அன்னையின் விழிகள் மீன்களின் அழகையும், நீலோத்பலத்தின் (கருங்குவளை) கருமையையும் வென்று விடுகின்றன என்று சொல்வது வெகு அழகு! அதாவது, "அன்னையின் காதில் மெதுவாக ஓதுவது போல் கண்கள் காணப்படுவதால், தங்களைப் பற்றிக் கோள் சொல்வதாக அச்சம் அடைந்து, பெண் மீன்கள் கண்களை மூடாமல் பார்த்துக் கொண்டே நீரில் மறைந்து கொண் டிருக்கின்றன என்பது நிச்சயம்." (மதுரை மாநகரில் உள்ள மீனாட்சி அம்மையின் திருக்கோயில் பொற் தாமரைக் குளத்தில் மீன்கள் வாழ்வதில்லை எனக் கூறுவார்)

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம், ஸௌந்தர்யலஹரீ ஆகியவற்றின் சாராம்சமாக, இப்பாடலின் முதல் மூன்று அடிகளில் அன்னை அபிராமியின் திருவிழிகளை அபிராமி பட்டர் வர்ணித்திருப்பது, அவருடைய மேதாவிலாசத்தை காட்டுகிறது.

அன்னையின் விழிகளின் அழகையும், பெருமையையும், மகிமையையும் இதுவரை பார்த்தோம். அப்பேர்ப்பட்ட சிறந்த விழிகளை மனதில் தியானம் செய்யும் அன்பர்கள் அடையும் பேறும், பாக்யமும் என்ன என்பதை பார்க்கலாமா?

உலகம் முழுவதும் கவிக்கும் ஒரு ஒப்பற்ற குடையின் கீழே சிங்காசனத்தில் அமர்ந்து, செங்கோலாட்சியும், மனுநீதி நெறியும் பொருத்தப் பெற்று, மலைகளால் சூழப்பெற்ற உலகத்தை ஆண்டு, பின்னர்ப் புள்ளிகளையுடைய தேவர் உலக யானையான ஐராவதத்தின் மீது ஊர்பவராகிக் கூட்டமாய்த் தேவர்கள் யாவரும் வந்து போற்றிட, போக தேவேந்திரன் என்று எல்லோரும் புகழ, தேவர் உலகத்தில் இந்திராணியுடன் இன்பம் அனுபவித்திருப்பர்!

(புலோமசை - புலோமன் என்ற அசுரனின் மகள். இந்திரன் புலோமனைக் கொன்று, புலோமசையை மணந்து, அவளை இந்திராணியாகச் செய்தான்).

சுருக்கமாகச் சொன்னால், அன்னையின் விழியருள் பெற்ற அன்பர்கள் தேவலோகத்தை ஆளும் தேவேந்திர பதவியைப் பெறுவர். அபிராமி அந்தாதியில், "பவளக்கொடியில் பழுத்த..... அமராவதி ஆளுகைக்கே"(38), "நயனங்கள் மூன்றுடை நாதனும் .... தமனியக் காவினில் தங்குவரே"(74) என்ற பாடல்களும் இதே கருத்தினைக் கொண்டது.

அபிராமி அந்தாதியின் 69-வது பாடல் "தனம் தரும்... அபிராமி கடைக்கண்களே" என்பதும் அன்னையின் கடைக்கண் பார்வையின் பெருமையைப் பற்றி கூறுவது யாவரும் அறிந்ததே. 100வது பாடலில், "உழையைப் பொரு கண்ணும் நெஞ்சில் எப்போதும் உதிக்கின்றவே" என்று நிறைவு பெருகிறது. நூற்பயன் பாடலில், "முக்கண்ணியைத் தொழுவார்க்கு ஒரு தீங்கில்லையே" என்று வருகிறது.

அதாவது, அன்னையின் திருக்கண்கள் எப்போதும் அபிராமி பட்டரின் அகக்கண்ணில் உதித்துக்கொண்டே இருப்பது அவர் எத்தகைய (எப்பேர்ப்பட்ட) அநுபூதிமான் என்பதை உள்ளங்கை நெல்லிக்கனி போல் உணர்த்துகிறது.

### 4. அன்னையே ஆதிமூலம்

*மறிகடல்கள் ஏழையும் திகிரி இருநான்கையும்*
*மாதிரக் கரி எட்டையும்*
*மாநாகம் ஆனதையும் மாமேரு ஆனதையும்*
*மாகூர்மம் ஆனதையும் ஓர்*
*பொறிஅரவு தாங்கிவரு புவனம்ஈர் ஏழையும்*
*புத்தேளிர் கூட்டத்தையும்*
*பூமகனையும் திகிரி மாயனையும் அரையினிற்*
*புலி ஆடை உடையானையும்*
*முறைமுறைகளாய் ஈன்ற முதியளாய்ப் பழைமை தலை*
*முறைகள் தெரியாத நின்னை*
*மூவுலகில் உள்ளவர்கள் வாலை என்று அறியாமல்*
*மொழிகின்றது ஏது சொல்லாய்?*
*அறிவுடைய பேர் மனத்து ஆனந்த வாரியே*
*ஆதிகடவூரின் வாழ்வே!*
*அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!*
*அருள்வாமி! அபிராமியே!*

ஞானமுடையோர் உள்ளத்தில் நிறைந்திருக்கும் ஆனந்தக் கடலே! புராதனப் புகழ்பெற்ற புண்ய க்ஷேத்திரமான திருக்கடவூரின் உயிரே! அமுதீசரின் இடப்பாகத்தை விட்டு ஒரு பொழுதும் அகலாதவளே! கிளியை தன் கையில் ஏந்தியவளே! அனைவருக்கும் அளவிலாது அருள் புரிபவளே! அபிராமியே!

ஏழு கடல்களையும் (பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், சுராக் (தேன்) கடல், நன்னீர்க் கடல், உப்புக் கடல்) எட்டு மலைகளையும் (இமயம், மந்தரம், கயிலை, விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதனம்), திசைகள் தோறும் உள்ள எட்டு யானைகளையும் (ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம்,

சுப்ரதீபம்), பெரிய நாகத்தையும் (வாசுகி) மகாமேருவையும், பெரிய கூர்மத்தையும் (ஆமை) ஓர் பொறி அரவு (ஆதிசேடன்) தாங்கும் பதினான்கு புவனங்களையும், தேவர்களின் இனத்தாரையும், தாமரையில் உறையும் பிரம்மனையும், சக்கரம் ஏந்திய திருமாலையும், இடையிலே புலியாடை உடுத்திய ஈசனையும், வரிசையாகப் படைத்த முதியவள் நீ!

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்(620) அநேக கோடி ப்ரஹ்மாண்ட ஜனனீ - பல கோடி பிரம்மாண்டங்களை ஈன்றெடுத்தவள். நமது பூமண்டலம், ஆகாச மண்டலம், நட்சத்திர மண்டலம் இவை எல்லாம் சேர்ந்து ஒரு பிரஹ்மாண்டம். இதைப் போல பல கோடி மண்டலம் கொண்டது பிரஹ்மாண்ட மண்டலம்.

இவற்றையெல்லாம் எவ்வாறு படைக்கிறாள் என்பதை நாமம்(648) "லீலா க்லுப்த ப்ரஹ்மாண்ட மண்டலா" என்று ஆழ்ந்த அர்த்தத்துடன் கூறுகிறது. அன்னை, விளையாட்டாகவே எல்லா பிரஹ்மாண்டங்களையும் சீரான அமைப்பில் வரிசை யாகப் படைத்தவள். விளையாட்டாகப் படைத்தாலும் அதன் ஒழுங்குமுறை தவறாது படைத்தவள்.

இதைத்தான் அபிராமி பட்டர் இப்பாடலில் "முறை முறைகளாய் ஈன்ற" என்று குறிப்பிடுகிறார். இதே கருத்தினை, ஸ்ரீ லலிதா த்ரிசதி(49) ஈக்ஷண - ஸ்ருஷ்டாண்ட கோடீ - இச்சா மாத்திரத்தினால் பிரம்மாண்ட கோடிகளைச் சிருஷ்டிப்பவள் என்று சொல்கிறது. ப்ரஹ்ம ஸூத்ரத்திலும் "லோக வத்து லீலா கைவல்யம்" என்பதை காண்க.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்(975) பூர்வஜா - எல்லாவற்றிற்கும் முன்னதாக தோன்றியவள். அதாவது அன்னைதான் எல்லா வற்றிற்கும் முதியவள். அவள் தான் "மூலப்ரகிருதி"(397).

இவ்வளவு கீர்த்தி பெற்ற அன்னையின் பழைமையும் தலைமுறைகளும் யார் அறிவார்? இப்படிப்பட்ட உன்னை மூவுலகத்தவரும் வாலை என்று அறியாமற் கூறுவது ஏனென்று நீயே சொல்வாய்! (வாலை என்றால் ஒன்றும் அறியாத சிறுமி, இளம்பெண், கன்னி என்று பொருள்).

### 5. அன்னையை நீலி என்று கூறுவதோ?

*வாடாமல் உயிர் எனும் பயிர் தழைத்து ஓங்கிவர*
*அருள்மழை பொழிந்தும் இன்ப*
*வாரிதியிலே நின்ன(து) அன்பெனுஞ் சிறகால்*
*வருந்தாமலே அணைத்துக்*
*கோடாமல் வளர்குஞ்சரம் தொட்டு எறும்புகடை*
*கொண்டகரு ஆனசீவ*
*கோடிகள் தமக்கும் புசிக்கும் புசிப்பினைக்*
*குறையாமலே கொடுத்து*
*நீடாழி உலகங்கள் யாவையும் திருஉந்தி*
*நெட்டு தனிலே தரிக்கும்*
*நின்னை அகிலங்களுக்கு அன்னை என்று ஓதாமல்*
*நீலி என்று ஓதுவாரோ?*
*ஆடாய நான்மறையின் வேள்வியால் ஓங்குபுகழ்*
*ஆதிகடவூரின் வாழ்வே!*
*அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!*
*அருள்வாமி! அபிராமியே!*

வேதங்களின் வாக்குப்படி நடைபெறும் யாகங்களால் புகழ்பெற்ற புராதன புண்ய க்ஷேத்திரத்திரமான திருக்கடவூரின் உயிர் நாடியாய் உறைபவளே! அமுதீசரின் இடப்பாகத்தை விட்டு ஒருபொழுதும் அகலாதவளே! கிளியைத் தன் திருக்கரத்தில் ஏந்தியவளே! அனைவருக்கும் அருள் புரிபவளே! அபிராமியே!

அன்னையின் கருணையை வியந்து பாராட்டும் பாடலிது! சீவராசிகள் என்னும் உயிர்களை படைப்பவள் அன்னை. அந்தப் பயிர்கள் வாடாமல் என்றும் தழைத்து ஓங்கி உயர்ந்து வளர வேண்டும். அதற்காக அன்னை அருள்மழை பொழிந்து அப்பயிர்களை இன்பக் கடலிலே ஆழ்த்தி தன் அன்பென்னும் சிறகால் அணைத்துக் கொள்கிறாள். எப்படி? ஒரு தாய், தன் சேய்களை அணைக்கும்போது அச்சேய்கள் துன்பப்படாமல் மிகவும் இலகுவாக அவற்றை அணுகுவாள். இதைத்தான், இங்கு, "வருந்தாமலே" என்று அழகாகச் சொல்கிறார் அபிராமி பட்டர்.

அபிராமி அந்தாதியிலும்(90) “வருந்தாவகை என் மனத் தாமரையினில் வந்து புகுந்து இருந்தாள் பழைய இருப்பிடமாக” என்றும் வருவதைக் காண்க!

அன்னையின் கருணையைச் சொல்லும் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்தில்(326) கருணாரஸஸாகரா - கருணை என்ற ஜலத்தோடு கூடிய கடல் போல் அன்னை இருக்கிறாள். கடலின் ஆழம் அளவிட முடியாது. அதுபோல் உள்ளது அன்னையின் கருணை. ஸ்ரீ லலிதா த்ரிசதி(153) காருண்ய விக்ரஹா - கருணையே உருவாய் கொண்டவள்.

யானை முதல் எறும்பு முடிய உள்ள அனைத்து ஜீவராசி களுக்கும் உண்ணக் குறையாமல் உணவு முறையாக வழங்கி அவைகளை வளர்க்கிறாள்.

நீண்ட கடல்களால் சூழப்பெற்ற உலகங்கள் அனைத்தையும் தன் திருவயிற்றில் தாங்கியிருக்கும் உன்னை, அன்னையே என்று அழைக்காமல் நீலி என்று அழைப்பார்களோ! அபிராமி அந்தாதியில்(75) “....மால்வரையும் பொங்குவர் ஆழியும் ஈரேழ் புவனமும் பூத்த உந்தி....” என்பதையும் காண்க.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்தில் ஜகத்தாத்ரீ(935), விதாத்ரீ (337) என்ற நாமாக்கள் அன்னை உலகத்தை தாங்குபவள் என்று கூறுகின்றன. ஒட்டக்கூத்தர் தக்கயாகப் பரணியில்(110) “அகில லோகம் ஈரேழும் உதர சோபி தாநாபி கமல வாயினால் மீள உமிழும் நீலி” என்பர். ஆதிசங்கரர், மனீஷா பஞ்சகத்தில்

“*யா ப்ரஹ்மாதி பிபீலி காந்த தனுஷு*
*ப்ரோதா ஜகத்ஸாக்ஷிணீ*” என்பார்.

அதாவது, தான் தோன்றாமலும், எல்லாவற்றிலும் தோன்றி யவளாய், அவ்வாறு தோன்றிய எல்லாவற்றிற்கும் சாட்சியாய் இருப்பவள். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்திலும் “ஆப்ரஹ்மகீட ஜனனீ (285) என்று அன்னையை போற்றுகிறார்கள். ப்ரஹ்மா முதல் புழு, பூச்சி வரை உள்ள எல்லா ஜீவன்களையும் ஈன்றவள் (கீடம் - நுண்ணிய கிருமி) தேவிக்கு எல்லா உயிர்களிடத்தும் ஒரே மாதிரியான அன்புதான். “பிரமன் முதலாய தேவரைப்பெற்ற அம்மே” என்பர் அபிராமி பட்டர்(22).

### 6. சேயின் சிறுமை தாய்க்கு இழிவன்றோ?

*பல்குஞ்சரம் தொட்டு எறும்புகடை ஆனதுஒரு*
*பல் உயிர்க்கும் கல் இடைப்*
*பட்டதேரைக்கும் அன்றுற்பவித்திடு கருப்*
*பம்தனில் ஜீவனுக்கும்*
*மல்கும் சராசரப் பொருளுக்கும் இமையாத*
*வானவர் குழாத்தினுக்கும்*
*மற்றும் ஒரு மூவர்க்கும் யாவர்க்கும் அவரவர்*
*மனச்சலிப்பு இல்லாமலே*
*நல்கும் தொழிற்பெருமை உண்டாய் இருத்தும்மிகு*
*நவநிதி உனக்கு இருந்தும்*
*நான் ஒருவன் வறுமையால் சிறியன்ஆனால்அந்*
*நகைப்பு உனக்கே அல்லவோ?*
*அல்கலந்து உம்பர்நாடு அளவெடுக்கும் சோலை*
*ஆதிகடவூரின் வாழ்வே!*
*அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!*
*அருள்வாமி! அபிராமியே!*

அடர்ந்து இருள் செறிந்து வானுலகை அளப்பது போல் வளர்ந்துள்ள சோலைகள் சூழ்ந்த புராதனப் புகழ்பெற்ற புண்யஸ்தலமான திருக்கடவூரின் உயிரே! அமுதீசர் இடப் பாகத்தை விட்டு ஒருபொழுதும் அகலாதவளே! கிளியை ஏந்திய திருக்கரம் உடையவளே! அனைவருக்கும் அளவிலாது அருள்புரிபவளே! அபிராமியே!

யானை முதல் எறும்பு வரை உள்ள பலவிதமான உயிர் களுக்கும், கண்ணுக்குத் தெரியாத கல்லினுள் இருக்கும் தேரைக்கும், கருவில் உள்ள ஜீவனுக்கும் மற்றும், அசையும் அசையாப் பொருள்களுக்கும், கண்களை இமைக்காத தேவர்கள் கூட்டத்திற்கும், பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மும் மூர்த்திகளுக்கும் மற்றும் அகிலத்தில் உள்ள அனைவருக்கும் அவரவர் மனம் சோர்வடையாதபடி அவர்கள் செய்யவேண்டிய தொழில்களை தந்தருளும் பெருமை உனக்கு உண்டு.

நவநிதியும் உன்னிடம் உண்டு. நவநிதி என்பன 1. கச்சபநிதி, 2. கற்பநிதி, 3. சங்கநிதி, 4. பதுமநிதி, 5. நந்தநிதி, 6. நீலநிதி, 7. மகாநிதி, 8. மகாபதுமநிதி, 9. முகுந்தநிதி.

உன்னிடம் எல்லாநிதிகளும் இருந்தும் உன் பக்தனாகிய நான் வறுமையால் வாடினால், அதனால் உண்டாகும் இகழ்ச்சி உனக்கல்லவா? என்று உரிமையுடன் தாயிடம் கேட்கிறார் அபிராமி பட்டர்.

## 7. அன்னையின் வளமையும் அத்தனின் வறுமையும்

*நீடும் உலகங்களுக்கு ஆதாரமாய் நின்று*
*நித்தமும் மூர்த்தி வடிவாய்*
*நியமமுடன் முப்பத்திரண்டு அறம் வளர்க்கின்ற*
*நீ மனைவியாய் இருந்தும்*
*வீடு வீடுகள் தோறும் ஓடிப்புகுந்து கால்*
*வேசற்று இலச்சையும் போய்*
*வெண்துகில் அரைக்கணிய விதியற்று நிர்வாண*
*வேடமும் கொண்டு கைக்கோர்*
*ஓடுஏந்தி நாடெங்கும் உள்ளம் தளர்ந்து நின்று*
*உன்மத்தன் ஆகி அம்மா*
*உன் கணவன் எங்கெங்கும் ஐயம் புகுந்து ஏங்கி*
*உழல்கின்றது ஏது சொல்லாய்?*
*ஆடுகொடி மாடமிசை மாதர் விளையாடி வரும்*
*ஆதிகடவூரின் வாழ்வே!*
*அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!*
*அருள்வாமி! அபிராமியே!*

கொடிகள் ஆடி அசைகின்ற மாடங்கள் தோறும் பெண்கள் விளையாடுகின்ற, பழம் பெருமை வாய்ந்த திருக்கடவூரின் உயிர் நாடியாய்த் திகழ்பவளே! அமுதீசர் இடப்பாகத்தை விட்டு ஒருபொழுதும் அகலாதவளே! கிளியைத் தன் திருக்கரத்தில் ஏந்தியவளே! அனைவருக்கும் அருள்புரிபவளே! அபிராமியே!

அன்னை அபிராமிதான் எல்லா உலகங்களுக்கும் ஆதாரமாக இருப்பவள். பக்தர்களுக்காக பல்வேறு புண்ய க்ஷேத்திரங் களிலும் பல வடிவங்களில் காட்சி தந்து அருள் புரிகிறாள்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் வாக்தேவதைகள் அன்னையை “நிராதாரா”(132) என்று அழைக்கிறார்கள்.

நிராதாரா - தானே எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருப்பதால் தனக்கென்று ஒரு ஆதாரமும் இல்லாதவள். அது அவளுக்கு அவசியமும் இல்லை. ஏனென்றால், (975)பூர்வஜா - அவள் எல்லாவற்றிற்கும் முன்னதாகவே உண்டானவள்.

திருமணம் ஆன மகளிர் எவ்வாறு இல்வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதற்கு தானே வாழ்ந்து காட்டி ஒரு முன்னோடியாகத் திகழ்கிறாள். தன் கணவன் சிவபெருமான் தனக்கு கொடுத்ததை மகிழ்வுடன் பெற்று, உலக விதிப்படி முப்பத்திரண்டு தர்மங்களையும் குற்றம் குறையில்லாது செய்கிறாள்.

அபிராமி பட்டர் இதனை அபிராமி அந்தாதியில்(57) "ஐயன் அளந்தபடி இரு நாழி கொண்டு அண்டம் எல்லாம் உய்ய அறம் செயும் உன்னையும் போற்றி" என்று பெருமிதத்துடன் சொல்கிறார். உலகம் அனைத்தும் அவளைப் போற்றுகிறதாம்.

அவள் "ஸ்ரீமாதா" என்று சொல்லித் தானே, வாக்தேவிகள் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தை ஆரம்பிக்கிறார்கள். மேலும் அதிலேயே அன்னையை "தர்ம வர்தினீ"(959) என்று புகழ்கிறார்கள். தர்மவர்தினீ என்றால் தர்மத்தை வ்ருத்தி செய்பவள். திருவையாறு என்று சொல்லப்படும் பஞ்சநத க்ஷேத்திரத்தில் "தர்மஸம்வர்த்தினீ (அறம் வளர்த்த நாயகி) என்ற பெயருடன் இருப்பவள்.

அன்னை சிவபெருமானுக்கு மனைவியாய் இருப்பதை, "தவளே! இவள் எங்கள் சங்கரனார் மனைமங்கலமாம்" என்று பூரிப்புடன் அபிராமி அந்தாதியில்(44) சொல்வார்.

இவ்வாறு எல்லாச் சிறப்புகளையும் பெற்று இருந்தும் உன் கணவனாகிய ஈசன் வீடுதோறும் சென்று கால்நோக, வெட்கத்தையும் விட்டு, இடையில் அணிய ஒரு வெள்ளைத் துணி கூட இல்லாமல் திகம்பரனாகக் கையில் ஓர் ஓடும் ஏந்தி மனம் தளர்ந்து பித்தனாகிப் பிச்சைக் கேட்டு அலைவது ஏன்? என்று தாயிடம் உரிமையோடு கேட்கிறார் அபிராமி பட்டர்.

குழந்தைகள் தானே தாயிடம் தைரியமாகப் பேசும். அபிராமி பட்டர் என்றும் அன்னை அபிராமியின் திருவடியில் தவழும் சேயாகவே நம் கண்முன் நிற்கிறார் அல்லவா! இந்த "தாய் - சேய்" பாவம் காண்பது மிக மிக அரிது!

**8. அன்னையே! என்று(ம்) நீ என் மனத்தாமரையில் அமருவாய்!**

*ஞானம் தழைத்து உன் சொருபத்தை அறிகின்ற*
*நல்லோர் இடத்தினில் போய்*
*நடுவினில் இருந்து உவந்து அடிமையும் பூண்டுஅவர்*
*நவிற்றும் உபதேசம் உட்கொண்டு*
*ஈனம்தனைத் தள்ளிஎனது நான் எனும்மானம்*
*இல்லாமலே துரத்தி*
*இந்திரிய வாயில்களை இறுகப்புதைத்து நெஞ்சு*
*இருள்அற விளக்கு ஏற்றியே*
*வான் அந்தம் ஆனவிழிஅன்னமே உன்னை என்*
*மனத் தாமரைப் போதிலே*
*வைத்து வேறே கவலை அற்றுமேல் உற்றபர*
*வசமாகி அழியாதது ஓர்*
*ஆனந்த வாரிதியில் ஆழ்கின்றது என்று காண்?*
*ஆதிகடவூரின் வாழ்வே!*
*அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!*
*அருள்வாமி! அபிராமியே!*

பழம்பெருமை வாய்ந்த புராதன, புண்ய க்ஷேத்திரமான திருக்கடவூரின் உயிராய் விளங்குபவளே! அமுதீசர் ஒரு பாகத்தை விட்டு அகலாதவளே! கிளியைத் தன் திருக்கரத்தில் ஏந்தியவளே! அனைத்துயிர்களுக்கும் அருள்புரியும் அன்னையே! அபிராமியே!

அபிராமி அம்மை பதிகத்தின் சிகரமாய்த் திகழும் இப்பாடலில் அபிராமி பட்டர் பல அரிய கருத்துக்களை சொல்லியுள்ளார். ஸத்சங்கத்தின் இன்றியமையாமையையும், ஐம்புலன்களை அடக்கி, மனதிலே அறியாமை என்னும் ஆணவத்தை வென்று, மனத்தாமரையில் அன்னையை அமரச் செய்வதே ஆத்மசாதகன் ஒருவன் முக்தியடைய முதன்மையான வழியாகும் என்பதை தெள்ளத் தெளிவாக உணர்த்துகிறார்.

அபிராமி பட்டரோ ஒரு சிறந்த அநுபூதிமான். ஜீவன் முக்தர். அவர் தன் புறக்கண்ணிலும், அகக்கண்ணிலும் அன்னையை எந்நிலையிலும், எந்நேரத்திலும் காணும் பக்குவம் பெற்றவர். ஆனாலும், இம்மண்ணுலகில் வாழும் மனிதர்கள் நலம் கருதி அவர் தன்னை மிகவும் தாழ்த்திக் கொண்டு அன்னையிடம்

மனமுருக பிராத்திக்கின்றார். இதுதான் பெரியவர்கள், சான்றோர்கள், ஞானிகள், மகான்கள் - இவர்களின் இயல்பு

*"பணியுமாம் என்றும் பெருமை; சிறுமை*
*அணியுமாம் தன்னை வியந்து"* *(978)*

என்ற வள்ளுவரின் வாக்கினை நோக்குக! அதாவது, பெருமை யுடையவர் மிக்க சிறப்பு உண்டாய காலத்தும், செருக்கின்றி அடங்கி நடப்பர். சிறுமை உடையவரோ எக்காலத்தும், தம்மைத் தாமே வியந்து பாராட்டிக் கொள்வர்.

அபிராமி அந்தாதியில், அபிராமி பட்டர் தன்னை, "அறியேன், சிறியேன், வினையேன், பேயேன், நாயேன்...." என்று மிகவும் தாழ்த்திக் கொள்கிறார். இதுதான் பணிவின் அடையாளம். சமயக் குரவர்கள் நால்வரும், ஆழ்வார்களும், அருணகிரிநாதரும் இன்னும் கணக்கற்ற அருளாளர்களும் தங்களை தாங்களே இழித்துச் சொல்லிக் கொள்வார்கள். இதில் ஒரு அரிய கருத்து அடங்கியுள்ளது. இவர்கள் இயற்றிய பாமாலைகளை படித்து பாராயணம் செய்யும்போது நம்மைப் போன்ற சாமான்யர்களும் - "நான்", "எனது" என்பதை முற்றிலும் மறந்து ஆணவத்தை அழித்து அன்னையிடம் அடக்கமாகி விடுவோம்.

ஆன்மீக மார்க்கத்தில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று நான்கு நிலைகள் கூறப்படுகின்றன. இதில் ஞானம் கடைசியாகவும், சிறந்ததாகவும் விளங்குகிறது. ஞானம் வந்து விட்டால் உலகப்பற்று போய்விடும். அப்போது அன்னையின் சொரூபம் புரியும். இதை நம்மிடம் தக்க வைத்துக் கொள்ள நாம் ஸத்சங்கத்தில் எப்போதும் இருக்க வேண்டும். அதாவது 'நல்லோர் இடத்தினிற் போய்" - என்று அழகாகச் சொல்கிறார் அபிராமி பட்டர். அபிராமி அந்தாதியில்(12) "பகல் இரவா நண்ணியது உன்னை நயந்தோர் அவையத்து" என்று அவர் கூறுவது - அவர் எப்போதும் ஸத்சங்கத்திலே இருந்தவர் என்பதைக் காட்டுகிறது.

அவ்வாறு நல்லோர் நடுவில் இருந்து அவர்களுக்கு இடைவிடாது பணி செய்யும் தொண்டர்களாகி (மிக்க விருப்பத்துடன்) அவர்கள் அருளும் உபதேசத்தை மனதில் கொண்டு சிறுமையை நீக்கி, "நான்", "எனது" என்னும்

அபிமானத்தை விரட்டி, ஐம்புலன்களின் வாயில்களை முற்றிலும் அடைத்துவிட அன்னையின் அருளைக் கோருகிறார்.

ஔவைப் பாட்டியாரும், "விநாயகர் அகவலில், "ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம் இன்புறு கருணையின் இனி தெனக்கு அருளி..." என்று விநாயகரிடம் வேண்டுகிறார்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்திலும், "ஞானதா"(643) ஞானத்தைக் கொடுப்பவள், "ஞான விக்ரஹா"(644) - ஞானமே வடிவானவள். திரிபுடி எனப்படும் அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற மூன்றும் மறைந்து, சிறந்த அறிவு / ஆனந்த அனுபவம் மட்டும் எஞ்சியிருக்கும் வடிவானவள்.

விக்ரஹம் என்றால் விஸ்தாரம் என்றும் பொருள். அன்னையின் அருளினால் ஞானம் மேன்மேலும் விரிவடைந்து, முடிவில் ஞானம் மட்டுமே தனித்து நிற்கும் நிலை ஏற்படும். நமது சிற்றறிவு விரிவடைந்து பேரறிவான ஞானமாகிறது.

இதைத்தான் அபிராமி பட்டர் இரத்தினச் சுருக்கமாக "ஞானம் தழைத்து உன் சொரூபத்தை அறிகின்ற..." என்று வெகு அழகாகச் சொல்கிறார். "அவளின்றி அணுவும் அசையாது" என்பதை அறிந்த அனுபூதிமான்.

**நெஞ்சு இருள் அற விளக்கேற்றியே:** மனத்தில் உள்ள அறியாமை என்னும் இருள் நீங்கும்படி ஞான விளக்கை ஏற்றி விட வேண்டும். அபிராமி அந்தாதியில்(36) "என் மனத்து வஞ்சத்து இருளேதும் இன்றி ஒளி வெளியாகி இருக்கும் உன்றன் அருளேது அறிகின்றிலேன் அம்புயாதனத்து அம்பிகையே" என்று உருக்கமாக, உணர்ச்சியுடன் உரைக்கிறார்.

இப்பாடலை பூர்த்தி செய்யும்போது, பக்திப் பரவசமாகி "அன்னையே! அமிர்தம் பொழியும் பெருமைமிக்க விழியுடைய அன்னமாகிய உன்னை என் மனம் என்னும் தாமரைப்பூவில் அமர்த்தி வேறு எந்தக் கவலையும் இல்லாமல் பரவசமாகி ஆனந்தக் கடலில் ஆழ்வது எப்போது?" என்று நெக்குருகிறார்.

தேவர்கள் அமிர்தத்தை அடைத்து வைத்த கடமே லிங்கமானதன்றோ! நஞ்சுண்ட ஈசனையும் அமிர்தமாகச்

செய்தவள் அன்னை அபிராமி! "வார்சடையோன் அருந்திய நஞ்சு அமுதாக்கிய அம்பிகை...." அபிராமி அந்தாதி (5).

இதெல்லாம் நடந்தது எப்படி? அன்னையின் கடைக்கண் பார்வை பட்டாலே போதும்! எல்லாம் அமிர்தமயமாகி விடும்!

**சொரூபம்:** சொரூபம் என்று அபிராமி பட்டர் சொல்வது ஆழ்ந்த கருத்தையுடைத்து. "ரூபம்" என்பது ஸ்தூல வடிவத்தை குறிப்பது. சொரூபம் என்பது ஸூக்ஷ்மமான இயல்பைக் குறிப்பது. முன்னது ஸகுண உபாஸனை. சொரூபம் என்றது அன்னையின் தன்னியல்பு, சிறப்பியல்பு என்று கூறலாம். இதை ஞானத்தினால் மட்டும் அறியக்கூடும். இவ்வாறு உணர்ந்தால்தான் ஆனந்தக் கடலில் மூழ்கும் அனுபவம் ஏற்படும். திருமூலர் இதை அழகாக, திருமந்திரத்தில் சொல்கிறார்.

"*முகத்தில் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்*
*அகத்தில் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்*" (2944)

ஊனக் கண்களுக்கு பரம்பொருள் தென்படாது. ஆனால் ஞானக்கண் கொண்டு அறிய முயல்பவர்களுக்கு அந்தப் பரம்பொருளை உணரும் ஆனந்த அனுபவம் ஏற்படும். அவரவர் உணர்ந்தறியக் கூடியதே தவிர, சொல்லில் விளக்க முடியாத ஒன்றாகும். இதைத்தான், "கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்" என்பார்கள்.

பகவத் கீதையிலும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா தன்னுடைய உண்மையான சொரூபத்தை அருச்சுனன் காண்பதற்கு அவனுக்கு ஞானக் கண்களைத் தருவதும் காண்க!

அபிராமி அம்மை பதிகத்தின் முதல் பாடலில் அன்னையிடம் பதினாறு பேறுகளையும் தந்தருள்வாய் என்று வேண்டிய பின் "பெரிய தொண்டரொடு கூட்டு கண்டாய்" என்று முடித்திருப்பது ஸத்சங்கம் வாழ்க்கையில் ஒரு மனிதனுக்கு இன்றியமையாத, தலைசிறந்த துணை என்பதை புரிய வைக்கிறார். மேலும் இந்த ஸத்சங்கத்தை அன்னை தான் அமைத்தருள முடியும் என்பதையும் குறிப்பிடுகிறார் அல்லவா! அபிராமி அந்தாதியில் (41), "நம் காரணத்தால் நண்ணி இங்கே வந்து தம் அடியார்கள் நடுவிருக்கப் பண்ணி...." என்று அபிராமி பட்டர் கூறுவது -

அன்னை தன் கருணை உள்ளத்தினால் தன் பக்தர்களுக்கு ஸத்சங்கத்தை அமைத்துத் தருவாள் என்பதை விளங்க வைக்கிறது. (இதை முதல் பாடலிலே பார்த்தோம்.)

இங்கு அன்னையை “அன்னம்” என்று சொல்வது மிக்க, ஆழ்ந்த கருத்துடையது. அன்னம் பாலில் உள்ள நீரைப் பிரித்து பாலை மட்டும் குடிக்கும். அதுபோல, அறியாமை என்னும் இருளை நீக்கி ஞானம் என்னும் ஒளியைத் தருபவள் அன்னை. மேலும் அன்னம் எவ்வளவு மேலே பறந்தாலும் தன்னுடைய இருப்பிடத்திற்கு சரியாக திரும்பி விடும். அதுபோல் அன்னை, எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளாய் இருந்தாலும் அன்பர்களின் மனத்தாமரையைத் தேடி வந்து அமருவாளாம் (தன் பழைய இருப்பிடமாகக் கொண்டு). அபிராமி அந்தாதியில் (99) “கமலத்தின் மீது அன்னமாம்” என்று புகழ்கிறார் அபிராமி பட்டர். அதாவது அன்பர்களின் மனம் எனும் தாமரை (கமலம்) மீது அமர்ந்து இருக்கும் அன்னமாகிய அன்னை.

### 9. அன்னையே! என்று என்னை உன் மகன் என்பாய்?

*சலதி உலகத்திற் சராசரங்களை ஈன்ற*
*தாயாகினால் எனக்குத்*
*தாயல்லவோ? யான் உன் மைந்தன் அன்றோ? எனது*
*சஞ்சலம் தீர்த்து நின்றன்*
*முலை சுரந்து ஒழுகுபால் ஊட்டி என் முகத்தினை உன்*
*முன்தானையால் துடைத்து*
*மொழிகின்ற மழலைக்கு உகந்து கொண்டு இளநிலா*
*முறுவலும் பூத்து அருகில் யான்*
*குலவி விளையாடல் கண்டு அருள்மழை பொழிந்து அங்கை*
*கொட்டி “வா” என்று அழைத்துக்*
*குஞ்சரமுகன் குமரனுக்கு இளையன் என்று எனைக்*
*கூறினால் ஈனம் உண்டோ?*
*அலைகடலிலே தோன்றும் ஆராத அமுதமே!*
*ஆதிகடவூரின் வாழ்வே!*
*அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!*
*அருள்வாமி! அபிராமியே!*

அலைகள் நிறைந்த கடலில் தோன்றிய தெவிட்டாத அமுதமே! புராதன புண்யஸ்தலமான திருக்கடவூரின் உயிராய்

விளங்குபவளே! அமுதீசர் இடப்பாகத்தை விட்டு ஒருபொழுதும் அகலாதவளே! கிளியைத் தன் திருக்கரத்தில் ஏந்தியவளே! அனைத்துயிர்களுக்கும் அருள் புரிபவளே! அபிராமியே!

இங்கு "கடலில் தோன்றிய ஆராத அமுதமே" என்று குறிப்பிட்டது அரிய கருத்துடைத்து. திருப்பாற்கடல் அமுதத்தினை தேவர்களுக்கு அளித்தவள் அன்னை அபிராமியே! இதை அபிராமி அந்தாதியில்(90), "விண்மேவும் புலவருக்கு விருந்தாக வேலை மருந்தானதை நல்கும் மெல்லியலே!" என்று அபிராமி பட்டர் சொல்கிறார். மேலும் (24)ல்"அமரர் பெருவிருந்தே" என்பார். அன்னையின் அருளினால் திருமால், மோகினி வடிவம் பெற்று தேவர்களுக்கு மட்டும் அமுதத்தை வழங்கினாரல்லவா! திருமாலுக்கும் "ஆராவமுதன்" என்ற பெயர் இதனால் ஏற்பட்டது! சிவன் - சக்தி - நாராயணன் அபேதம். மேலும், "தரங்கக்கடலுள் வெங்கட் பணியணை(35) மேல் துயில் கூரும் விழுப்பொருளே" (35) என்று அன்னையை அழைக்கிறார்.

தாய் - சேய் பாவத்தின் உச்சகட்டமாய் விளங்கும் பாடலிது. குழந்தைகள் தங்கள் தாய்மார்களிடத்தில் பலவித பாவங்களுடன் பழகும். தாயிடம் கொஞ்சும், கெஞ்சும், மிரட்டும். சண்டைபோடும். விரட்டும். உரிமையுடன் போராடும். இவற்றையெல்லாம் அந்தத் தாயானவள் (மனதில் சிரித்துக் கொண்டே) ஆனந்த அனுபவமாக எடுத்துக் கொள்பவள்.

அபிராமி பட்டர் அன்னையிடம், "அன்றே தடுத்து என்னை ஆண்டு கொண்டாய்! கொண்டது அல்ல என்கை நன்றே உனக்கு..."(30) என்று மிரட்டுகிறார். மேலும் அதிலேயே ஒன்பதாவது பாடலில் ("கருத்தன எந்தை...") அன்னையின் நகில்களில் வரும் கருணையும், அருளும் கலந்த அமுதத்தை நானும் அருந்தமாட்டேனா? என்ற ஏக்கத்தை மறைமுகமாக தெரிவிக்கிறார்.

இந்தப் பாடலில் அபிராமி பட்டர் நேரிடையாகவே அன்னையிடம், "உன் நகில்களில் வழிந்தோடும் பாலை எனக்கும் ஊட்டினால் என்ன? நீ என்ன குறைந்தா போய் விடுவாய்..." என்று கேட்பது நம்மை மெய் சிலிர வைக்கிறது. நம் கண்களில் நம்மையறியாமலேயே நீர் பெருகி ஓடுகிறதல்லவா! இனி பாடலை முழுமையாகக் காண்போம்.

அம்மா! கடல் சூழ்ந்த உலகத்தில் அசைவன, அசையாதன ஆகிய அனைத்தையும் 'நீ' ஈன்றெடுத்த தாயல்லவா! அப்படியானால் 'நீ' எனக்கும் தாய்தானே! நான் உன் மகன் தானே! எனது துன்பங்களைக் (கவலைகளை) போக்கி, உன்னுடைய தனத்திலிருந்து ஒழுகும் பாலை எனக்கு ஊட்டி, என் முகத்தை உன் முன்தானையால் துடைத்து, நான் பேசும் மழலைச் சொல்கேட்டு மகிழ்ந்து, இளம் சந்திரன் போல் புன்னகை செய்து, நான் மகிழ்ச்சியுடன் விளையாடுவது கண்டு அருள் மழை பொழிந்து, உன் அழகிய கைகளால் தட்டி, "வா" என்று என்னை அழைத்து, விநாயகனுக்கும், முருகனுக்கும் இளையவன் நீ என்று சொன்னால், அதனால் உனக்கு ஏதும் தாழ்வு ஏற்படுமோ?

பக்தி பரவசத்தின் ஆனந்த அமுதநிலையில் நிற்கிறார் அபிராமி பட்டர். அவர் பிறந்த மண்ணிலே நாமும் பிறந்ததிற்கு முன் ஜன்மத்தில் என்ன புண்யம் செய்தோமோ? அன்னை அபிராமியே அறிவாள்!

### 10. அந்தகன் வரும்போது நீ வந்து அருள்வாய்!

*கைப்போது கொண்டு உன் பதப்போது தன்னிற்*
*கணப்போதும் அர்ச்சிக்கிலேன்*
*கண் போதினால் உன் முகப்போது தன்னையான்*
*கண்டு தரிசனை புரிகிலேன்*
*முப்போதில் ஒரு போதும் என்மனப் போதிலே*
*முன்னி உன் ஆலயத்தின்*
*முன்போதுவார் தமதுபின் போத நினைகிலேன்*
*மோசமே போதுகின்றேன்*
*மைப்போதகத்திற்கு நிகர் எனப்போதும் எரு*
*மைக்கடா மிசை ஏறியே*
*மாகோர காலன் வரும்போது தமியேன்*
*மனம் கலங்கித் தியங்கும்*
*அப்போது வந்து உனது அருட்போது தந்தருள்க!*
*ஆதிகடவூரின் வாழ்வே!*
*அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!*
*அருள்வாமி! அபிராமியே!*

பழம்பெருமை வாய்ந்த புண்யஸ்தலமான திருக்கடவூரின் உயிராய் விளங்கும் அன்னையே! அமுதீசர் இடப்பாகத்தை

விட்டு ஒரு பொழுதும் அகலாதவளே! கிளியைத் தன் திருக்கரத்தில் ஏந்தியவளே! அனைவருக்கும் அருள்புரியும் அம்பிகையே! அபிராமித்தாயே!

இப்பாடலில் அபிராமிபட்டரின் கவிதா விலாசம் நம்மை ஆட்கொள்கிறது! "போது" என்ற சொல்லை ஒவ்வொரு வரியிலும், அவர் கையாளும் திறன் அவருடைய வாக்கு வன்மையை காட்டுகிறது. 'போது' என்ற சொல் - அரும்பு, மலர், செவ்வி, காலம், பொழுது என்று பல்பொருளுடைத்து.

கையில் மலர்களைக் கொண்டு உனது திருவடித் தாமரையை (பதப்போது) ஒரு நொடிப்போது கூட அர்ச்சனை செய்கின் றேனல்லன். கடவுள் எனக்கருளிய கண் மலர்கள் கொண்டு உன் தாமரை போன்ற திருமுகத்தை தரிசிக்கவில்லை. மூன்று நேரங்களிலும் (காலை, உச்சி, மாலை) ஒருநேரம் கூட என் உள்ளத்தில் உன்னை நினைத்து, உன் ஆலயம் செல்வோர் பின் செல்ல நினைப்பதில்லை. இதனால் மோசமே போகின்றேன்.

கரிய யானைக் கன்றையொத்த எருமைக்கடா மீது ஏறி மகா கோரமான யமன் என்னை நோக்கி வரும்போது என் மனம் கலங்கித் தவிக்கும். அப்போது நீ வந்து உன் அருள் எனும் மலரைத் தந்து என்னைக் காக்க வேண்டும் என்று மெய்யுருகி அன்னையிடம் வேண்டுகிறார் அபிராமி பட்டர்.

உன்னை ஒரு க்ஷணமும் உபாசனை செய்யாவிட்டாலும், அதை மனதில் கொள்ளாது, யமன் வரும் சமயத்தில் நீதான் வந்து என்னைக் காப்பாற்றி அருள வேண்டும் என்கிறார் அபிராமி பட்டர். அல்லும்பகலும், அதாவது எப்பொழுதும் அன்னையையே நினைத்து உருகுபவர். அவர் இப்படி விண்ணப்பிகிறார் என்றால், அது யாருக்காக? - இவ்வுலகத்தில் வாழும் சாமான்யர்களின் மேல் கொண்ட கருணையால் தான் என்பதை நாம் உணர வேண்டும்.

"இழைக்கும் வினைவழியே அடும் காலன் எனை நடுங்க அழைக்கும் பொழுது வந்து அஞ்சல் என்பாய்" என்று அபிராமி அந்தாதியிலும்(33) அபிராமி பட்டர் கூறுவர்.

அந்திம காலத்தில் மரணாவஸ்தை உண்டாகும் பொழுது இறைவனுடைய நினைவு வருவது வெகு அரிது. அது பல

வருடங்களின் பயிற்சியால்தான் ஏற்படும். சாகுந்தறுவாயில், "சங்கரா, சங்கரா" என்பது எளிதன்று. அப்பர் சுவாமிகளே, "ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய், ஒக்க அடைக்கும்போது உணரமாட்டேன்" என்று சொல்லும்போது, மற்றவர்கள் எம்மாத்திரம்? இதனைக் கருதியே, ஆழ்வாரும்,

"அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன்" - என்பர். அருணகிரிநாதரும், "மாகத்தை முட்டி வரும் நெடுங்கூற்றன் வந்தால் என்முன்னே தோகைப் புரவியில் தோன்றி நிற்பாய்" என்று வேண்டுகிறார்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்தில் (749). ம்ருத்யுதாரு குடாரிகா" - மரணம் என்ற மரத்தை வெட்டும் கோடாலியாக இருப்பவள்.

திருக்கடவூர் - கால ஸம்ஹார க்ஷேத்ரமல்லா! எனவே, யமன், அன்னையைப் பார்த்த மாத்திரத்தில் பறந்திடுவான். அதனால் தான் அபிராமி பட்டர் அன்னையை, "நீ என் முன் வந்து நிற்க" என்று சாமாத்தியமாக வேண்டுகிறார்.

## 11. அனைத்தினிற்கும் ஆதாரம் - ஆதிகடவூர் அபிராமியே!

*மிகையும் துரத்த வெம்பிணியும் துரத்தமத*
*வெகுளி மேலும் துரத்த*
*மிடியும் துரத்த நரைதிரையும் துரத்த நனி*
*வேதனைகளும் துரத்தப்*
*பகையும் துரத்த வஞ்சனையும் துரத்த முப்*
*பசி என்பதும் துரத்தப்*
*பாவம் துரத்த அதிமோகம் துரத்தமல*
*பவகார்யமும் துரத்த*
*நகையும் துரத்த ஊழ்வினையும் துரத்தமுழு*
*நாணும் துரத்த வெகுவாய்*
*நாவறண்டோடி இருகால் தளர்ந்திடும் என்னை*
*நமனும் துரத்துவானோ?*
*அகில உலகங்களுக்கு ஆதாரமே கூறும்*
*ஆதிகடவூரின் வாழ்வே!*
*அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!*
*அருள்வாமி! அபிராமியே!*

அனைத்து உலகங்களுக்கும் ஆதாரம் என்று சொல்லப்படும், முதன்மை வாய்ந்த திருக்கடவூரின் உயிராய் விளங்கும் அன்னையே! அமுதீசர் இடப்பாகத்தை விட்டு அகலாதவளே! கிளியைத் தன் திருக்கரத்தில் ஏந்தியிருப்பவளே! அனைத்து உயிர்களுக்கும் அருள்புரிபவளே! அபிராமியே!

ஸ்ரீ லலிதா மஹா திரிபுரசுந்தரி சொரூபிணியான ஸ்ரீ அபிராமி ஸர்வமங்கள ரூபிணியாய் புண்ய பாரதத்தில் திருக்கடவூரில் எழுந்தருளி அன்பர்களின் அல்லல்களை அகற்றி, காத்து, அழியா முக்தி ஆனந்தத்தை அள்ளி அருளும் அன்னை. அன்பர் அபிராமி பட்டர் வாயிலாக அருளியது - "அபிராமி அந்தாதி". திருக்கடவூரின் உயிராய்த் திகழ்ந்து பதினான்கு புவனங்களையும் ஆள்பவள் அவளே - அதாவது "புவனேச்வரீ" (294)

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் - ஜகதீகந்தா (325) - ஜகத்திற்கு மூலகாரணமாக இருப்பவள். உலகத்திற்கு வேர் போன்றவள். தாவரத்தின் வேர் தாவரத்தைத் தாங்குகிறது. அதற்கு வேண்டிய ஊட்டச்சத்தை தருகிறது. அதேபோல் அன்னை ஜகத்தை தாங்குகிறாள், போஷிக்கிறாள்.

அன்னை அபிராமியை - "ஆதிகடவூரின் வாழ்வே!" என்றார். எனவே அகில உலகங்களுக்கும் - "திருக்கடவூர் - ஆதாரம்" என்பது மிகவும் பொருத்தமாய் அமைந்துள்ளது.

உலக மக்கள் தினமும் படும் அவஸ்தைகளும், அதனால் உண்டாகும் துன்பங்களையும், துக்கங்களையும் ஒரு பட்டியல் போட்டு அன்னையிடம் சமர்ப்பித்து, நீ தான் எங்கள் துன்பங்களைப் போக்க வேண்டும் என்று சொல்லாமல் சொல்வது வெகு அழகு. (உலக க்ஷேமம் பொருட்டு!)

துன்பம் துரத்துகிறது. இதைப்போன்று - கொடிய நோய், கோபம், மதம், வறுமை, மூப்பு, தளர்ச்சி, மிக்க வேதனைகள், பகை, சூழ்ச்சி, பெண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை, பாவம், மோகம், மலங்கள் (ஆணவம், கன்மம், மாயை), ஊழ்வினை, வெட்கம் இவையெல்லாம் நம்மைத் துரத்திக் கொண்டே இருக்கிறது.

இதனால் நாக்கு வறண்டு போகும்படி ஓடியோடிக் கால்களும் தளர்ந்து போயின. இந்நிலையில் எமனும் வந்து எனை துரத்து

வானோ? அவ்வாறு துரத்தினால் நீயே கதி! என்பதே இதன் கருத்து. சென்ற பாடலில் இதை உத்தேசித்தே யமன் வரும்போது நீ என் முன் வந்து அருள்புரிய வேண்டும் என்று சொன்னார் போலும்!

அபிராமி அந்தாதி நூற்பயன் பாடலில் இறுதியாக - "முக்கண்ணியைத் தொழுவார்க்கு ஒரு தீங்கில்லையே" என்று வெளிப்படையாக கூறி படிப்போர் மனதில் ஒரு அசைக்க முடியாத நம்பிக்கையை ஏற்படுத்தினார் அல்லவா! இங்கு, தீங்குகள் எல்லாவற்றையும் ஒன்று விடாது கூறி அவைகளி லிருந்து காப்பவள் அன்னை அபிராமிதான் என்பதை சாமான்யர் களுக்கு (அவர்கள் சந்தேகங்களை போக்குவதுபோல்) வெகு தெளிவாக கூறுகிறார் அபிராமி பட்டர்.

இத்துடன் அபிராமி அம்மை பதிகம் - I பூர்ணமாகிறது. வாழ்க அபிராமி பட்டர்! வாழ்க அன்னை அபிராமி அருள்!

# அபிராமி அம்மை பதிகம் - II

## 1. அத்தன் வியக்கும் அன்னையின் ரூபம்

*கங்கையொடு தும்பையும் அணிந்தவர் வியக்கும்*
*கலாமதியை நிகர் வதனமும்*
*கருணை பொழிவிழிகளும் விண்முகில்கள் வெளிறு என*
*காட்டிய கரும் கூந்தலும்*
*சங்கை இல்லாது ஒளிரும் மாங்கல்ய தாரணம்*
*தங்கும் மணிமிடறும் மிக்க*
*சதுர் பெருகு துங்க பாசாங்குசம் இலங்குகர*
*தலமும் விரல் அணியும் அரவும்*
*புங்கவற்கு அமுதருளும் மந்தர குசங்களும்*
*பொலியும் நவமணி நூபுரம்*
*பூண்ட செஞ்சேவடியும் இவ்வடியனேன் நிதம்*
*போற்றி என வாழ்த்த விடைமேல்*
*மங்களம் மிகுந்த நின்பதியினொடும் வந்து அருள் செய்!*
*வளர் திருக்கடவூரில் வாழ்*
*வாமி! சுபநேமி! புகழ்நாமி! சிவசாமி மகிழ்*
*வாமி! அபிராமி! உமையே!*

வளங்கள் மிகுந்த திருக்கடவூரில் வாழும் தேவியே! நலந்தரும் சக்கராயுதம் ஏந்தியவளே! பல திருநாமங்களால் புகழப்படும் தேவியே! சிவபெருமான் மகிழும் தேவியே! அபரிமித மான அழகுடையவளே! உமையம்மையே!

சுபநேமி - என்பது சக்கராயுதம் ஏந்திய தேவி என்று பொருள் படும். அன்னை திருமாலின் சகோதரி. எனவே அன்னையும் சக்கரத்தை ஏந்தியுள்ளாள். மனதை சக்கரத்திற்கு ஒப்பாகச் சொல்வார்கள். மனம் ஒரு நிலையில் நிற்காது. சக்கரத்தைப்

போன்று சுழண்டு கொண்டேயிருக்கும். அன்னை, தன் கருணையால் நம் 'மனதை' அவள் திருக்கரத்தில் தரித்து, நம் மனம் என்றும் நிலையாக நின்று அவளையே துதிக்கச் செய்கிறாள்.

அபிராமி அம்மை முதல் பதிகத்தில் அன்னையை கேசாதிபாத மாக (கார் அளக பந்தியும்) வர்ணித்த அபிராமி பட்டர், இப் பாடலில், அன்னையின் கணவர் சிவபெருமானே அன்னையின் "கேசாதி பாத"மான அழகைக் கண்டு வியந்து மகிழ்ச்சியடை கிறார் என்று நம்மை உணர வைக்கும் கவிதா விலாசம், எல்லா புகழ்ச்சியும் தாண்டி நிற்கிறது! ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் - 52 சிவகாமேச்வராங்கஸ்த்தா - தன் பர்த்தாவான சிவகாமேச் வரனுடைய மடியில் (இடது பக்கத்தில்) வீற்றிருப்பவள். அதாவது சிவபெருமான், தான் அடைந்த மகிழ்ச்சியினால் தன் மனைவியை தனது இடது மடியில் அமரச் செய்துள்ளார். அதனால் அவளுக்கு காமேச்வரீ என்ற பெயரும் உண்டாயிற்று!

சிவபெருமான் தன்னுடைய நீண்ட சடையின் மேல் கங்கையையும், தும்பைப் பூ மாலையும் அணிந்திருக்கிறார். கார்த்திகை மாத ஸோம வாரங்களில் (திங்கட் கிழமை) மாலை வேளையில் சிவபெருமானுக்கு 1008 தும்பை மலர்களினால் அர்ச்சனை செய்வது நம்மவர் வழக்கம்.

முதலில் அன்னையின் திருமுகத்தைப் பார்க்கிறார். அன்னை பூர்ண சந்திரனாக (எல்லாக் கலைகளுடனும்) தேஜோமயமாகத் திகழ்கிறாள். அடுத்து, அவள் திருவிழிகள் கருணை சிந்துவதாய் உள்ளது. அன்னையின் கரிய கூந்தலைக் காணும்போது கருமேகக் கூட்டங்களும் வெண்மையாகத் தோன்றுகிறதாம். அபிராமி அந்தாதியில், "கன்னங்கரியகுழலும்"(53), "கனந்தரும் பூங்குழலாள்"(69) என்று வரும்.

அன்னையின், மணியான திருக்கழுத்தில் அளவிலா ஒளிவீசும் மங்கல நாண் விளங்குகிறது. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம்-30, காமேச - பத்த - மாங்கல்ய - ஸூத்ர - சோபித - கந்தரா - காமேசுவரர் கட்டிய மங்கலநாணுடன் பிரகாசிக்கும் கழுத்தினள். இது உலகிற்கே மங்களத்தை வழங்குவது. இந்தப் பலனை

முதலில் அடைந்தது மன்மத - ரதி தம்பதிகள் தானே! ஆதிசங்கரர், ஸௌந்தர்யலஹரீயில்(69) இதை காவ்யரஸத்துடன் சொல்லுகிறார்.

*"கலே ரேகாஸ்திஸ்ரோ கதி-கமக-கீதைக-நிபுணே*
*விவாஹ-வ்யாநத்த-ப்ரகுணகுண-ஸங்க்யா ப்ரதிபுவ: |*
*விராஜந்தே நானாவித-மதுர-ராகாகர-புவாம்*
*த்ரயாணாம் க்ராமாணாம் ஸ்திதி-நியம ஸீமான இவதே: ||"*

ஸங்கீத கதி, கமகம், கீதம் ஆகியவற்றில் ஒப்புயர்வற்ற திறமை வாய்ந்தவளே! உன்னுடைய கழுத்தில் உள்ள மூன்று பாக்கிய ரேகைகள், விவாக காலத்தில் நன்றாய் கட்டப்பட்ட பல நூல்கள் கொண்ட சரட்டின் எண்ணிக்கையை ஞாபகப் படுத்துவது போலும், பல விதமான இனிய ராகங்களுக்குத் தோற்றுவாயாக உள்ள ஷட்ஜம், மத்யமம், காந்தாரம் என்ற மூன்று தொகுதிகளுக்கும் இடத்தையும், எல்லையையும் பிரித்துக் காட்டுவது போலும் விளக்குகின்றன.

தன்னுடைய திருக்கரங்களில் பெருமை மிக்க தூய்மையான பாச அங்குசங்களைத் தாங்கியுள்ளார். விரலில் நாகாபரணம் அணிந்திருக்கிறாள். தேவர்களுக்கு அமுதம் தரும் மேரு மலையையொத்த தனங்கள் அன்னையின் மார்பில் விளங்கு கின்றன. (அபிராமி அந்தாதி-9 கருத்தன எந்தை தன் கண்ணன வண்ணக் கனகவெற்பிற்...) அன்னையின் திருவடிகளில் ஜொலிக்கும் நவமணிகள் பதித்த சிலம்புகள் பிரகாசிக்கின்றன.

உன்னுடைய இந்த திருக்கோலத்தை அடியேன் நிதமும் வாழ்த்தக் காளை வாகனத்தின் மீது உன்னுடைய நாயகனுடன் வந்து அருள் புரிவாயாக! அபிராமி அந்தாதியிலும்(4), அன்னையைத் தனியாகக் கூப்பிடாமல், "புனிதரும் நீயும் என் புந்தி எந்நாளும் பொருந்துகவே" என்று இருவரையும் சேர்த்தே கூப்பிடுவது, அவர் சிவனையும், சக்தியையும் தனியாக வழிபடாமல் "சிவசக்த்யைக்ய ரூபிணீயாக" வணங்கியவர் என்பதை நாம் அறிகிறோம். (அர்த்தநாரீஸ்வரர் திருக்கோலம்) பின்னும், "உமையும் உமையொரு பாகனும் ஏக உருவில் வந்திங்கு எமையும் தமக்கன்பு செய்ய வைத்தார், "சொல்லும் பொருளும் என நடமாடும் துணைவருடன்" என்பர்.

## உ. அன்னையின் திருநாமங்கள்

*சந்திர ஜடாதரி! முகுந்தஸோதரி துங்க*
*ஜலஜலோசந மாதரீ*
*ஸம்ப்ரம பயோதரி! ஸுமங்கலி! ஸுலக்ஷணீ!*
*சாற்றரும் கருணாகரீ!*
*அந்தரி! வராகி! சாம்பவி! அமலை! ஸுரதோத்ரி!*
*ஆதிஜக ஜால ஸுேத்ரீ!*
*அகிலாத்ம காரணி! விநோதசய நாரணி!*
*அகண்ட சிந்மய பூரணீ!*
*சுந்தரி! நிரந்தரி! துரந்தரி! பர்வதராஜ*
*ஸுகுமாரி! கௌமாரி! உத்*
*துங்க கல்யாணி! புஷ்பாஸ்த்ர அம்புஜ பாணி!*
*தொண்டர்கட் கருள் சர்வாணீ!*
*வந்து அரிமலர்ப்பிரமன் ஆதிதுதி வேதஒலி*
*வளர் திருக்கடவூரில் வாழ்*
*வாமி! சுபநேமி! புகழ்நாமி! சிவசாமி மகிழ்*
*வாமி! அபிராமி! உமையே!*

திருமாலும், பிரமனும் வந்து துதிக்கின்ற, வேத ஒலி முழங்குகின்ற திருக்கடவூரில் வாழும் தேவியே! நலம் தரும் சக்கராயுதம் ஏந்தியவளே! பல நாமங்களால் புகழப்படும் தேவியே! சிவன் மகிழும் தேவியே! அபிராமியே! உமையம்மையே!

அன்னையின் திருநாமங்கள் எண்ணிக்கையிலடங்கா! ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம், ஸ்ரீ லலிதா த்ரிசதீ, ஸ்ரீ லலிதா அஷ்டோத்திரம், இன்னும் பல தேவியின் ஸ்தோத்திரங்களும் அன்னையின் திருநாமங்களின் வரிசையே. அபிராமி பட்டர் ஒரு தலைசிறந்த ஸ்ரீவித்யா உபாஸகர் என்பதை மறக்ககூடாது. அவர் தினமும் தவறாது தேவியின் திவ்ய திருநாமங்களைப் பாராயணம் செய்தவர். அபிராமி அந்தாதியில்(66) "வினையேன் தொடுத்த சொல் அவமாயினும் நின் திருநாமங்கள் தோத்திரமே" என்று பணிவுடன் அபிராமி பட்டர் கூறுவது அவர் நாம பாராயணத்தில் ஆழ்ந்த நம்பிக்கையுடையவர் என்பதைக் காட்டுகிறது! ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்(732) நாம பாராயண ப்ரீதா-அன்னை நாம பாராயணத்தால் ப்ரியம் அடைபவள்.

அன்னையின் திவ்ய திருநாமங்கள் ஒவ்வொன்றும் அன்னையின் வெவ்வேறு உருவ அமைப்பையும், பராக்கிரமத் தையும், அனந்த கல்யாண குணங்களையும் வெளிப்படுத்து கின்றன. அவளுடைய தனிச்சிறப்பை உணர்த்துகின்றன. இக்காரணத்தினால் அன்னையை - "புகழ்நாமி" என்று போற்று கிறார் அபிராமி பட்டர்.

அபிராமி அந்தாதியில்(50), "நாயகி, நான்முகி, நாராயணி... என்று ஆயகியாதி உடையாள்." என்றும், "பயிரவி, பஞ்சமி, பாசாங்குசை... என்றே செயிரவி நான்மறை சேர் திருநாமங்கள் செப்புவரே"(77) என்றும் வருவது காண்க. இத்திருநாமங்கள் வேதங்களிலுள்ள உட்பொருளைச் சொல்பவை. இவை சொல்பவர்களின் குற்றங்களைப் போக்கும் தன்மை வாய்ந்தவை.

அன்பர்கள், அன்னையின் அருளைப் பெறுவதற்காக அவளுடைய திருநாமங்களை அபிராமி அந்தாதியிலும், அபிராமி அம்மை பதிகங்களிலும் அபிராமி பட்டர் சேர்த்திருப்பது அவருடைய உள்ளக்கிடக்கையை உணர்த்துகிறது.

| | |
|---|---|
| சந்திர ஜடாதரி | சந்திரனை சடையில் தரித்தவள் |
| முகுந்தஸோதரி | திருமாலின் சகோதரி |
| துங்க ஜலஜலோசந | தூயதாமரை போன்ற விழிகளை உடையவள் |
| மாதரீ | காளி |
| ஸம்ப்ரம பயோதரி | எக்காலத்தும் தந்தருளும் அமிருத ரஸம் நிறைந்த தனங்களையுடையவள். (சிறுவன் சம்பந்தன் அன்னையின் ஞானப் பாலை அருந்தியபின் தானே ஞானசம்பந்தர் ஆனது. ஆதிசங்கரரும் பால பருவத்தில், அன்னையின் ஞானப்பாலை அருந்தியதாக புராணம் சொல்கிறது.) |
| ஸுமங்கலி | மிகவும் மங்களமானவள். |
| ஸுலக்ஷிணீ | எல்லா லட்சணங்களையும் கொண்ட பேரழகானவள் |

| | |
|---|---|
| சாற்றரும் கருணாகரீ | வார்த்தைகளால் விவரிக்க முடியாத கருணையின் வடிவமானவள். |
| அந்தரி | அனைத்திற்கும் ஆதாரம் ஆனவளே! |
| வராகி | உலகம் உய்யும் பொருட்டு வராஹ (பன்றி) உருவத்தில் வந்தவள். இவளே அன்னையின் சேனாதிபதி. அன்னை துர்காவை வணங்குமுன் வராகியை பிரார்த்திக்க வேண்டும். |
| சாம்பவி | சம்புவின் (சிவன்) நாயகி. சிவபக்தர்களின் (சாம்பவர்கள்) அன்னை. எட்டு வயது கன்னிகை. |
| அமலை | பார்வதி |
| ஸுரதோத்ரி | இன்பம் தருபவள் |
| ஆதிஜகஜால ஸூத்ரி | உலகை இயக்கும் மாயவித்தையின் சூத்ரதாரி |
| அகிலாத்ம காரணி | உலகஉயிர்களுக்கு காரணமானவள்! |
| விநோத சய நாரணி | வெற்றி மிக்க நாராயணி! |
| அகண்ட சிந்மய பூரணி | முழுமையான ஞான பூரணி! |
| சுந்தரி | பேரழகுடையவள்! |
| நிரந்தரி | என்றும் நிரந்தரமானவள். (ஆதியும் அந்தமும் அற்றவள்) |
| துரந்தரி | அனைத்துயிர்களையும் காப்பவள் |
| பர்வத ராஜ ஸுகுமாரி | மலையரசனின் புதல்வியாக தோன்றியவள். |
| கௌமாரி | என்றும் இளமையுடன் இருப்பவள். சப்த மாதாக்களில் ஒருவர். |
| உத்துங்க கல்யாணி | தூய்மை மிக்க கல்யாணி (அனைத்து மங்களங்களையும் தருபவள்) |
| புஷ்பாஸ்த்ர அம்புஜ பாணி | தாமரை போன்ற கரங்களையுடையவள். மலர்க்கணைகளை ஏந்தியவள். |
| தொண்டர்கட்கருள் சர்வாணீ! | தொண்டர்களுக்கு அருள்புரியும் சர்வேஸ்வரியே! (பார்வதி) |

உனக்கு வணக்கம் செய்கிறோம்.

அன்னையின் திருநாமங்களைச் சொல்லுங்கால் அந்த நாமங்களின் பொருளை உணர்ந்து சொல்ல வேண்டும். அப்போது தான் அன்னையுடன் ஒன்றும் ஐக்யபாவம் ஏற்படும். இறைவி ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு பெயரில் பூஜிக்கப் படுகிறாள். மும்பையில் மும்பா தேவியாகவும், கன்யா குமரியில் குமரி அம்மனாகவும், காஞ்சியில் காமாட்சியாகவும், மதுரையில் மீனாட்சியாகவும், காசியில் விசாலாட்சியாகவும், கல்கத்தாவில் காளியாகவும் இன்னும் கணக்கிலா வடிவங்களில் அன்பர்களுக்கு அருள்புரியத் தானே வலிய வந்து காட்சி தருகிறாள்.

நாமபாராயணப் பயிற்சி நமக்கு ஒரு கட்டுப்பாட்டை ஏற்படுத்தி பக்குவத்தையும் அளிக்கும். அருளாளர்கள் அனைவரும் போதிப்பது இதுதான்.

### 3. மாதரின் மயக்கம் மறைய

*வாசமலர் மருவுஅளக பாரமும் தண்கிரண*
*மதிமுகமும் அயில் விழிகளும்*
*வள்ளம் நிகர் முலையும் அனநடையும் நகைமொழிகளும்*
*வளமுடன் கண்டு மின்னார்*
*பாசபந்தத்திடை மனம் கலங்கித் தினம்*
*பல வழியும் எண்ணி எண்ணிப்*
*பழிபாவம் இன்னதென்று அறியாமல் மாயப்ர*
*பஞ்ச வாழ்வு உண்மை என்றே*
*ஆசை மேலிட்டு வீணாக நாய்போல் திரிந்து*
*அலைவது அல்லாமல் உன்றன்*
*அம்புயப்போது எனும் செம்பதம் துதியாத*
*அசடன் மேல்கருணை வருமோ?*
*மாசிலாது ஓங்கிய குணாகரி! பவானி! சீர்*
*வளர் திருக்கடவூரில் வாழ்*
*வாமி! சுபநேமி! புகழ்நாமி! சிவசாமி மகிழ்*
*வாமி! அபிராமி! உமையே!*

குற்றமற்ற சிறந்த குணங்களின் இருப்பிடமாய்த் திகழும் தேவியே! பவனின் (சிவன்) பத்தினியான பவானியே! பெருமை மிக்க திருக்கடவூரில் வாழும் தேவியே! நலம் தரும் சக்கராயுதம்

ஏந்தியவளே! பல நாமங்களால் புகழப்படும் தேவியே! சிவபெருமான் மகிழும் தேவியே! அபரிமிதமான அழகுடைய அபிராமியே! உமையம்மையே!

இம்மண்ணுலகில் மனிதன் மூன்று ஆசைகளினால் மதிமயக்கம் அடைகிறான். அவை மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை. இந்த மூன்றினுள்ளும் பெண்ணாசை மிக வலியது. மூப்பு வந்த நிலையிலும் அதிலிருந்து மீள முடிவதில்லை. "இந்திரன் கெட்டதும் பெண்ணாலே, சந்திரன் கெட்டதும் பெண்ணாலே" என்பது ஒரு பழமொழி. பின், இதற்கு என்ன வழி? அன்னைதான் அதற்கும் அருள்புரிய வேண்டும்! இதை மனதில் கொண்டு அபிராமி பட்டர் அமைத்த பாடலிது!

மணமிக்க மலர்கள் நிறைந்த கூந்தலும், குளிர்ந்த நிலவைப் போன்ற முகமும், கூர்மையான விழிகளும், கிண்ணத்திற்கு நிகரான மார்பகங்களும், அன்ன நடையும், சிரித்துப் பேசும் மொழிகளும் கண்டு மாதரின் மயக்கத்தில் மனம் கலங்கி நாள்தோறும் பழி பாவங்களை அறியாமல் பொய்யான உலக வாழ்வு உண்மையே என்று ஆசை மிகுந்து நாய் போல் திரிந்து, அலைந்து அழிவதல்லாமல், தாமரை போன்ற உனது சிவந்த திருவடிகளைத் துதிக்காத இந்த அசடன் மேல் உனக்குக் கருணை ஏற்படுமோ?

என் குற்றத்தை மன்னித்து என் மேல் கருணை காட்ட வேண்டும் என்று விநயத்துடன் அன்னையிடம் கேட்கிறார் அபிராமி பட்டர். (வேண்டுகிறார்)

## 4. அவளின்றி அணுவும் அசையாது

*நன்று என்று தீது என்று நவிலும் இவ் இரண்டில் முன்*
*நவின்றதே உலகில் உள்ளோர்*
*நாடுவார் ஆதலால் அடியேனும் அவ்விதம்*
*நாடினேன் நாடினாலும்*
*இன்று என்று சொல்லாமல் நினது திருஉள்ளம் அது*
*இரங்கி அருள் செய்கு வாயேல்*
*ஏழையேன் உய்குவேன்; மெய்யான மொழி இஃது உன்*
*இதயம் அறியாதது உண்டோ?*

*குன்றம் எல்லாம் உறைந்து என்றும் அன்பருக்கு அருள்*
*குமார தேவனை அளித்த*
*குமரி! மரகத வருணி! விமலி! பயிரவி! கருணை*
*குலவு கிரி ராஜ புத்ரீ!*
*மன்றல் மிகு நந்தந வனங்கள் சிறை அளிமுரல*
*வளர் திருக்கடவூரில் வாழ்*
*வாமி! சுபநேமி! புகழ்நாமி! சிவசாமி மகிழ்*
*வாமி! அபிராமி! உமையே!*

குன்றுகள் தோறும் எழுந்தருளி அடியார்க்கு அருள்புரியும் குமரவேளை அருளிய குமரியே! மரகத (பச்சை) நிறத்தவளே! தூய்மையானவளே! பயிரவியே! கருணையுடன் விளங்கும் மலையரசன் மகளே!

இங்கு "குமார தேவனை அளித்த குமரி" என்று அன்னையைச் சொல்லும் கவிநயம் காண்க! (குமரி-கன்னி, கல்யாணமாகாதவள்!) அபிராமி அந்தாதியில்(65)..... மூதறிவின் மகனும் உண்டாயதன்றோ வல்லி நீ செய்த வல்லபமே." என்று அன்னையைப் போற்றுகிறார்.

மணங்கமழும் சோலைகளில் வண்டுகள் ரீங்காரம் செய்யும் திருக்கடவூரில் வாழும் தேவியே! நலந்தரும் சக்கராயுதம் ஏந்தியவளே! பல நாமங்களால் புகழப்படும் தேவியே! சிவபெருமான் மகிழும் தேவியே! அபரிமிதமான அழகுடைய அபிராமியே! உமையம்மையே!

நல்லது, கெட்டது என்ற இரண்டில் அனைவரும் நாடுவது நல்லதையே! இது உலக இயற்கை. அது போல் நானும் நல்லதையே நாடினேன். அவ்வாறு நான் செய்தது சரியா, தவறா என்று யான் அறியேன், எனவே இல்லை என்று சொல்லாமல் உன் திருவுள்ளம் இரங்கி அருள் செய்தால் அடியேன் பிழைப்பேன். இது உண்மையான வார்த்தை. (சத்தியம்) உன் திருவுள்ளம் அறியாதது ஏதும் உண்டோ?

அபிராமி அந்தாதியில் அன்னையின் "திருவுளம்" என்று இரண்டு பாடல்களில்(19-30) அபிராமி பட்டர் குறிப்பிடுகிறார்.

"தெளிநின்ற ஞானம் திகழ்கின்றதென் திருவுளமோ"(19)
"நடுக்கடலுள் சென்றே விழினும் கரையேற்றுகை நின் திருவுளமே"(30)

அன்னையின் அருள் இன்றி எதுவுமே நடக்காது. அனைத்தையும் அறிபவள் அன்னை. அவளின்றி அணுவும் அசையாது. அவளே ஆதிமூலம், இது தான் அபிராமி பட்டரின் **"வேதம்".**

## 5. தமியேனின் துன்பம் தீர்ப்பாய்!

*ஒருநாள் இரண்டுநாள் அல்லநாள் உலகத்து*
*உதித்து இந்த நாள் வரைக்கும்*
*ஒழியாத கவலையால் தீராத இன்னல் கொண்டு*
*உள்ளம் தளர்ந்து மிகவும்*
*அரும்நாணி அற்றிட்ட வில்போல் இருக்கும்இவ்*
*அடிமை மீதிற் கருணை கூர்ந்து*
*அஞ்சேல்! எனச்சொல்லி ஆதரிப்பவர்கள் உனை*
*அன்றி இலை உண்மை ஆக;*
*இருநாழி கைப்போதும் வேண்டாது நிமிஷத்து*
*இலக்கம் இலி புவனத்தையும்*
*இயற்றி அருளும் திறம் கொண்ட நீ ஏழையேன்*
*இன்னல் தீர்த்து அருளல் அரிதோ?*
*வரும் நாவலூரர் முதலோர் பரவும் இனியபுகழ்*
*வளர் திருக்கடவூரில் வாழ்*
*வாமி! சுபநேமி! புகழ்நாமி! சிவசாமி மகிழ்*
*வாமி! அபிராமி! உமையே!*

நாவலூரராகிய சுந்தரர் போன்ற அருளாளர்கள் போற்றிப் பரவும் புகழ்மிக்க திருக்கடவூர் வாழ் தேவியே! நலந்தரும் சக்கராயுதம் ஏந்தியவளே! பல நாமங்களால் புகழப்படும் தேவியே! சிவபெருமான் மகிழும் தேவியே! அபரிமிதமான அழகுடைய அபிராமி தேவியே! உமையம்மையே!

சேயின் அருகில் தாய் ஆதரவாக இருந்தாலும், அச்சேயிடம், "நான் இருக்கிறேன். நீ எதற்கும் கவலைப்படாதே" என்று

சொன்னால்தான், அச்சேய் ஆறுதல் அடையும். அபிராமி பட்டரும் தன்னை சேயாகக் கொண்டவர். அவர் அன்னையிடம் அடிக்கடி வேண்டுவது எல்லாம் அவள், "குழந்தாய்! நான் இருக்கிறேன். நீ எதற்கும் அஞ்சேல்" என்று சொல்ல வேண்டுமாம்!

அபிராமி அந்தாதி: "இழைக்கும் வினைவழியே அடும் காலன் எனை நடுங்க அழைக்கும் பொழுது வந்து அஞ்சல் என்பாய்"(33) "குரம்பை அடுத்துக் குடிபுக்க ஆவிவெங் கூற்றுக்கிட்ட வரம்பை அடுத்து மறுகும் அப்போது வளைக்கை அமைத்து அரம்பை அடுத்த அரிவையர் சூழ வந்து அஞ்சல் என்பாய்..."(49)

இப்பாடலிலும் அபிராமி பட்டர் மெய்யுருகி, அன்னையிடம், "சத்தியமாகச் சொல்கிறேன். உன்னையன்றி என்னை யாராலும் காப்பாற்ற முடியாது" என்று சரணாகதி அடைகிறார்.

ஒரு நாள் அல்ல. இரண்டு நாள் அல்ல. பிறந்த நாள் முதல் இன்று வரையும் கவலையால் முடிவில்லாத துன்பங் கொண்டு, மனம் சோர்ந்து, நாண் அறுந்த வில்லைப் போல் இருக்கும் இந்த அடிமையின்பால் கருணை கொண்டு, "அஞ்சாதே" என்று சொல்லி என்னை ஆதரிப்பவர்கள் உன்னையன்றி யாருமில்லை. இது சத்தியம். ஒரு க்ஷணத்தில் எண்ணற்ற புவனங்களைப் படைத்துக் காத்தருளும் வல்லமை மிக்க உனக்கு, இந்த ஏழையின் துன்பம் தீர்த்து அருள் புரிவது முடியாத காரியமா? என்று சேயின் உரிமைக்குரலோடு தாயிடம் வினவுகிறார் அபிராமி பட்டர்!

அன்னையின் ஆற்றல் அளத்தற்கரியது! ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம்(281) உன்மேஷ நிமிஷோத்பன்ன விபன்ன புவனாவளி - கண்களைத் திறந்து மூடுவதினால் இந்த லோகங்களைத் தோற்றுவித்து மறையச் செய்பவள். ஸ்ருஷ்டி என்ற தொழிலை தேவி அனாயாசமாகச் செய்கிறாள் என்பதைக் கண் இமைத்த லால் செய்கிறாள் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

தாயைப் பிரிந்த சேய் தவிப்பதுபோல், அபிராமி பட்டர், "அம்மா! நீ எப்போது வந்து என்னை ஆட்கொள்வாய்! உன்னை பிரிந்து வந்து இவ்வுலகில் நான் பட்ட துன்பங்கள் போதாதா?" என்று கேட்பது படிப்பவரின் மனதை உருக்குகிறதல்லவா?

## 6. பூர்ண அருட்பார்வை அளிப்பாய்!

*எண்ணிக்கை இல்லாத துன்பங்கள் மேன்மேலும்*
*ஏறிட்டு ஒறுக்க அந்தோ!*
*எவ்விதம் உளம் சகித்து உய்குவேன்? இப்பொழுது*
*எடுத்திட்ட சன்மம் இதனில்*
*நண்ணி எள்அளவு சுகம்ஆனது ஒரு நாளினும்*
*நான் அநுபவித்தது இல்லை*
*நாடு எலாம் அறியும் இதுகேட்பது ஏன்? நின்உளமும்*
*நன்றாய் அறிந்து இருக்கும்*
*புண்ணியம் பூர்வ சனனத்தினில் செய்யாத*
*புலையன் ஆனாலும் நினது*
*பூரண கடாக்ஷ வீட்சண்ணியம் செய்து எனது*
*புன்மையை அகற்றி அருள்வாய்!*
*மண்ணவர்கள் விண்ணவர்கள் நித்தமும் பரவும் இசை*
*வளர் திருக்கடவூரில் வாழ்*
*வாமி! சுபநேமி! புகழ்நாமி! சிவசாமி மகிழ்*
*வாமி! அபிராமி! உமையே!*

மனிதர்களும், தேவர்களும் தினமும் போற்றித் துதிக்கும் புகழ்பெற்ற திருக்கடவூரில் வாழும் தேவியே! நலந்தரும் சக்கரப் படை ஏந்தியவளே! பல நாமங்களால் புகழப்படும் தேவியே! சிவபெருமான் மகிழும் தேவியே! அபரிமிதமான அழகுடைய அபிராமியே! உமையம்மையே!

இந்தப் பாடலும் அபிராமி பட்டர் சாமான்யருக்காக அன்னையிடம் பிரார்த்தனை புரியும் பாணியில் அமைந்துள்ளது!

கணக்கில்லாத துன்பங்கள் மேலும் மேலும் பெருகித் துன்புறுத்துகின்றன. இதை எவ்வாறு உள்ளத்தில் தாங்கி வாழ்வேன்? இப்பிறவியில் எள் அளவு (துளியேனும்) சுகத்தைக் கூட நான் அனுபவித்ததில்லை. இது உலகம் அறிந்த உண்மை. நின் உள்ளமும் இதை நன்றாய் அறியும்.

முந்தையப் பிறவியில் புண்ணியம் செய்யாத புலையன் (இழிவு பட்டவன்) நான். ஆனாலும் உன்னுடைய பூர்ண அருட் பார்வையை எனக்குந் தந்து, அருள் புரிந்து என் சிறுமையைப் போக்கி அருள வேண்டும். (கடாஷம்-அருள், வீட்சண்ணியம் - பார்வை)

அபிராமி அந்தாதியில் அன்னையின் கடைக்கண் பார்வையின் மகிமையைப் பற்றிச் சிலாகித்த அபிராமி பட்டர் இங்கு அன்னையின் "பூர்ண அருட்பார்வையை" வேண்டுவது சிந்திக்கத் தக்க ஒரு கருத்தை உள்ளடக்கியுள்ளது.

நான் புண்ணியம் செய்யாத புலையன் - அதனால் என்னைக் காப்பாற்றி உய்விக்க "கடைக்கண் பார்வை போதாது". உன்னுடைய "பூர்ண அருட்பார்வை" தான் என்னை கடைத் தேற வைக்க முடியும் என்று கூறுவதுபோல் உள்ளது அல்லவா! என்னே! அபிராமி பட்டரின் தன்னடக்கம்!

## 7. பிழை பொறுப்பாய் தாயே!

*தெரிந்தோ அலாது தெரியாமலோ இவ்வடிமை*
*செய்திட்ட பிழை இருந்தால்*
*சினம் கொண்டு அது ஓர் கணக்காக வையாது நின்*
*திருவுளம் இரங்கி மிகவும்*
*பரிந்து வந்து இனியும் நான் பாழ்வினையில் ஆழ்ந்து இன்னல்*
*படாது நல்வரம் அளித்துப்*
*பாதுகாத்து அருள் செய்ய வேண்டும்! அண்டாண்ட உயிர்*
*பரிவுடன் அளித்த முதல்வி!*
*புரந்தரன் போதன் மாதவன் ஆதியோர்கள் துதி*
*புரியும் பதாம் புயமலர்ப்*
*புங்கவி! புராந்தகி! புரந்தரி! புராதனி!*
*புராணி! திரிபுவநேஸ்வரீ!*
*மருந்தினும் நயந்த சொற் பைங்கிளி! வராகி எழில்*
*வளர் திருக்கடவூரில் வாழ்*
*வாமி! சுபநேமி! புகழ்நாமி! சிவசாமி மகிழ்*
*வாமி! அபிராமி! உமையே!*

அமுதத்தினும் மிக்க இனிய மொழி பேசும் பைங்கிளியே! வராகியாய் வந்து உலகத்தை காத்து ரட்சிப்பவளே! சக்கரப் படை கொண்டவளே! பல நாமங்கள் புகழப்படும் தேவியே! சிவபெருமான் மகிழும் தேவியே! அபரிமிதமான அழகுடைய அபிராமியே! உமையம்மையே!

இப்பாடலில் தன்னை அபிராமி பட்டர் "அன்னையின் அடிமை" என்று பொருள் நயம்பட சொல்கிறார். அடிமையாய் இருப்பவனுக்கு தனக்கென்று ஒன்றும் கிடையாது. எல்லாம் அவனுடைய யஜமானனுடைய பொறுப்புதானே! இதை அபிராமி அந்தாதியில்(95) "நன்றே வருகினும் தீதே விளைகினும் நான் அறிவது ஒன்றேயுமில்லை! உனக்கே பரம்..." என்கிறார். உனக்கே பரம் என்பதை உனக்கே பாரம் என்று கொள்ள வேண்டும். அதாவது, "என்னுடைய உடல், பொருள், ஆவி எல்லாவற்றையும் உன்னிடம் சமர்ப்பித்து விட்டேன். என்னைக் காப்பது உன் பொறுப்பு" என்று அன்னையிடம் சொல்கிறார். இதைத்தான் ஆத்ம சமர்ப்பணம், ஸர்வ பரித்யாகம் என்று சான்றோர் கூறுவர்!

அடிமையாகிய நான் தெரிந்தோ, தெரியாமலோ செய்த தவறுகளை எண்ணிக் கோபம் கொள்ளாமல் உன் திருவுள்ளம் இரங்கி அன்பு காட்டி வந்து இன்னமும் நான் பாழும் வினைகளால் துன்பப்படாதபடி நல் வரங்களைத் தந்து என்னைப் பாதுகாத்து அருள் செய்வாயாக!

இந்திரனும், பிரமனும், திருமாலும் துதிக்கும் தாமரைத் திருவடியுடைய தெய்வப் பெண்ணே! திரிபுரங்களை அழித்த சிவசக்தியே! அகிலாண்டங்களையும் காத்து அருளும் புரந்தரியே! பர்வத ராசகுமாரியாய் தோன்றிய பார்வதியே! பழமையானவற்றிற்கும் பழமையான ஆதிமூலமான தேவியே! மூவுலகங்களுக்கும் தலைவியே!

அண்டங்கள் யாவற்றிலும் வாழும் உயிர்களைப் பரிவுடன் காத்தருளும் உலக முதல்வியே! என்னைக் காத்து உன் திருவருளைத் தருவாயாக!

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம் (297) ஹரிப்ரஹ்மேந்திர ஸேவிதா - விஷ்ணு, பிரம்மா, இந்திரன் முதலியவர்களால் சேவிக்கப்பட்டவள். 615. ஆதி ஶக்தி (உலகிற்கு) முதற் காரணமாகவும், முழுச் சக்தியாகவும் இருப்பவள். ஸகல ப்ரபஞ்சத்திற்கும் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தொழில்களையும் செய்யும் ஆதிகாரணமான சக்தி வடிவானவள்.

## 8. நல்வழி நல்குவாய்!

*வஞ்சகக் கொடியோர்கள் நட்பு வேண்டாமலும்*
*மருந்தினுக்கா வேண்டினும்*
*மறந்தும் ஓர் பொய்ம்மொழி சொல்லாமலும் தீமையாம்*
*வழியினில் செல்லாமலும்*
*விஞ்சுநெஞ்சு அதனில் பொறாமை தரியாமலும்*
*வீண்வம்பு புரியாமலும்*
*மிக்க பெரியோர்கள் சொலும் வார்த்தை தள்ளாமலும்*
*வெகுளி அவை கொள்ளாமலும்*
*தஞ்சம் என நினது பதகஞ்சம் துதித்திடத்*
*தமியனுக்கு அருள் புரிந்து*
*சர்வகாலமும் எனைக் காத்து அருள வேண்டும்!*
*சலக்கயல்கள் விழியை அனைய*
*வஞ்சியர் செவ்வாய் நிகரும் வாவிஆம் பல்மலரும்*
*வளர் திருக்கடவூரில் வாழ்*
*வாமி! சுபநேமி! புகழ்நாமி! சிவசாமி மகிழ்*
*வாமி! அபிராமி! உமையே!*

மீன்களைப் போன்ற விழியையுடைய பெண்களின் சிவந்த வாயைப் போலுள்ள செம்மலர்கள் பலவும் மலரும் பொய்கை களை உடைய திருக்கடவூரில் வாழும் தேவியே! நலந்தரும் சக்கராயுதம் ஏந்தியவளே! பல நாமங்களால் புகழப்படும் தேவியே! சிவபெருமான் மகிழும் தேவியே! அபரிமிதமான அழகுடைய அபிராமியே! உமையம்மையே!

இவ்வுலகில் மனிதர்கள் கடைத்தேற ஸத்சங்கம் எவ்வளவு இன்றியமையாததோ அதுபோல தீயவர்களின் உறவை ஒதுக்கித் தள்ள வேண்டியது மிகவும் அவசியம். துஷ்ட சகவாசம் எல்லா பாபங்களையும் கொண்டு வந்து சேர்க்கும். அதாவது ஸத்சங்கத்தில் இணையும் வாய்ப்பு அமையப் பெறா விட்டாலும் பரவாயில்லை! கசடர்களின் நேசம் மட்டும் கூடவே கூடாது. அது நம்மை, மீள முடியாத நரகம் என்னும் படுகுழியில் தள்ளிவிடும். இக்கருத்தினை வலியுறுத்தவே அபிராமி பட்டர், அபிராமி அந்தாதி மூன்றாவது பாடலிலேயே "வெருவிப் பிறிந்தேன் நின் அன்பர் பெருமை எண்ணாத கரும நெஞ்சால் மறிந்தே விழும் நரகுக்கு உறவாய மனிதரையே" என்று ஆக்ரோஷமாகச் சொல்லுகிறார். அதாவது,

*"கொள்ள வேண்டியது தேவியின் திருப்பாதம்*
*தள்ள வேண்டியது கசடர்களின் நேசம்."*

இப்பாடலிலும், துஷ்ட சகவாசத்தை தவிர்க்கவும், தீய வழிகளில் செல்லாமல் இருப்பதற்கும் அன்னையின் அருளை வேண்டுகிறார். உலகோர்க்கு சொல்லும் உன்னத பாடமாக அமைந்துள்ள பாடலிது.

வஞ்சகம் நிறைந்த கொடியவர்களின் நட்பை விரும்பாமல், மறந்தும் பொய் சொல்லாமல், தீய வழியில் செல்லாமல், உள்ளத்தில் பொறாமை கொள்ளாமல், வீண்வம்பு புரியாமல் பெரியோர்களின் அறிவுரைகளை ஒதுக்கித் தள்ளாமல், கோபம் கொள்ளாமல், உன் திருவடித் தாமரையே சரணம் என்று துதிக்கும் வண்ணம் இந்தத் திக்கற்றவனுக்கு அருள் புரிந்து எப்போதும் காத்தருள வேண்டும்.

அதாவது நாம் எல்லோரும் நல்வழியில் வாழ அன்னைதான் அருள் புரிய வேண்டும் என்பதை ஆணித்தரமாக அறைகிறார் அபிராமி பட்டர்.

### 9. நின் பாதங்களையே நம்பினேன்!

*எனது இன்னல் இன்னபடி என்று வேறு ஒருவர்க்கு*
*இசைத்திடவும் அவர்கள் கேட்டு இவ்*
*இன்னல் தீர்த்து உள்ளத்து இரங்கி நன்மைகள் செயவும்*
*என் அளவும் முடியாது நின்*
*உன்னத மருவும் கடைக்கண்ணின் அருள்சிறிது செயின்*
*உதவாத நுண் மணல்களும்*
*ஓங்கு மாற்று உயர் சொர்ண மலைஆகும் அது அன்றி*
*உயர் அகில புவனங்களைக்*
*கனமுடன் அளித்து முப்பத்திரண்டு அறமும்*
*கவின் பெறச் செய்யும் நின்னைக்*
*கருதும் நல் அடியவர்க்கு எளிவந்து ததியினில்*
*காத்து ரட்சித்தது ஓர்ந்து*
*வனசம் நிகர் நின்பாதம் நம்பினேன் வந்து அருள் செய்!*
*வளர் திருக்கடவூரில் வாழ்*
*வாமி! சுபநேமி! புகழ்நாமி! சிவசாமி மகிழ்*
*வாமி! அபிராமி! உமையே!*

வளங்கள் மிகுந்த திருக்கடவூரில் வாழும் தேவியே! நலந்தரும் சக்கரப்படை ஏந்தியவளே! பல நாமங்களால் புகழப்படும் தேவியே! சிவபெருமான் மகிழும் தேவியே! அபரிமிதமான அழகுடைய அபிராமியே! உமையம்மையே!

"நம்பினோர் கெடுவதில்லை. இது நான்கு மறை தீர்ப்பு" என்று பெரியோர்கள் கூறுவர். அதுபோல், அபிராமி பட்டர் அன்னையிடம் "தாயே! உனது திருவடியையே நம்பினேன்! நீ உடனே வந்து அருள் செய்ய வேண்டும்" என்று வேண்டும் பாடல் இது! மேலும் அன்னையின் கடைக்கண் பார்வை என்னவெல்லாம் செய்யும் என்பதையும், அழகாகச் சொல்கிறார். அன்னையின் புகழையும், மகிமையையும், பெருமைகளையும் பாடுவதில் பரமானந்தம் கொண்ட பக்தரல்லவா அபிராமி பட்டர்!

என் துன்பங்கள் இன்னின்ன என்று ஒருவரிடம் சொல்லி, அவர்கள் கேட்டு அவற்றைத் தீர்த்து மனமிரங்கி நன்மைகள் செய்வது என்பது எள்ளளவும் முடியாது. உன் உயர்ந்த இனிய கனிந்த கடைக்கண்ணின் அருட்பார்வை கொஞ்சம் பட்டாலும் பயன்படாத நுண்ணிய மணல் துகள் கூட உயர்ந்த மாற்றுடைய தங்க மலைகளாகும். அதுவல்லாமல் எல்லாப் புவனங்களையும் பெருமையுடன் படைத்துக் காத்து முப்பத்திரண்டு அறங் களையும் அழகுறச் செய்யும் உன்னைத் தியானிக்கும் அடியவர்களுக்கு தக்க சமயத்தில் (ததியினில்) எளிதில் வந்து காத்தருளும் தகைமையை நினைத்துத் தாமரை போன்ற உன் திருப்பாதங்களை நம்பினேன். வந்து அருள்புரிவாய்!

### 10. உமையே! உதைத்தது உன் பாதந்தானே!

*கருநீல வடிவம்ஆர் மாடுஏறி உத்தண்ட*
*கனதண்ட வெம்பாசமும்*
*கைக்கொண்டு சண்டமாகாலன் முன்எதிர்க்க மார்க்*
*கண்டனும் வெருண்டு நோக்கி*
*அருநீலகண்டன் எனும் நின்பதியை உள்ளத்தில்*
*அன்புகொண்டு அர்ச்சனை செய*
*அரனும் அ(வ்) இலிங்கம் பிளப்ப நின்னொடு தோன்றி*
*அவிர் செய்சூலத்தில் ஊன்றிப்*

*பெரு நீலமலை என நிலத்தில் அன்னவன் விழப்*
*பிறங்குதாளால் உதைத்துப்*
*பேசும் முனிமைந்தனுக்கு அருள் செய்தது உனதுஅரிய*
*பேர் அருளின் வண்ணம் அலவோ?*
*வருநீல(ம்) மடமாதர் விழிஎன்ன மலர்வாவி*
*வளர் திருக்கடவூரில் வாழ்*
*வாமி! சுபநேமி! புகழ்நாமி! சிவசாமி மகிழ்*
*வாமி! அபிராமி! உமையே!*

பெண்களின் கருநீலக் கண்களைப் போல் மலர்ந்துள்ள மலர்கள் நிறைந்த பொய்கைகள் சூழ்ந்த திருக்கடவூரில் வாழும் தேவியே! நலந்தரும் சக்கராயுதம் ஏந்தியவளே! பல நாமங்களால் புகழப்படும் தேவியே! சிவபெருமான் மகிழும் தேவியே! அபரிமிதமான அழகுடைய அபிராமியே! உமையம்மையே!

கருநீல எருமை மீதேறி, அச்சம் தரும் கொடிய, பாசக் கயிற்றை கையில் கொண்டு வலிமை மிகுந்த காலன் தன் முன்னே வரவும், மார்க்கண்டன் அச்சங்கொண்டு, உன் பதியாகிய சிவபெருமானை உள்ளத்தில் அன்புடன் அர்ச்சிக்க, சிவனும் ருத்திரனாக லிங்கம் பிளக்க உன்னோடு தோன்றி, ஒளிமிகுந்த சூலத்தால் எமனைத் தாக்க, அவனும் மண்ணில் மலைபோல் விழ, காலால் உதைத்து, மிருகண்டு முனிவரின் மைந்தனான மார்க்கண்டனுக்கு அருள் செய்தது நின் பேரருளின் சிறப்பு.

அபிராமி பட்டர் சிவனையும், சக்தியையும் எப்போதும் "அர்த்தநாரீசுவரர்" திருக்கோலத்தில் வழிபட்டவர். திருக்கடவூர் கால சங்கார க்ஷேத்திரம், சிவபெருமான் காலால் காலனை உதைத்தார். அது அவரது இடது கால் அன்றோ! எனவே காலனை உதைத்தது அன்னையின் "பொற்பாதம்" தானே! அபிராமி அந்தாதியில்(18)".... பொற்பாதமும் ஆகிவந்து, வெவ்விய காலன் என்மேல் வரும்போது வெளி நிற்கவே" என்று சாமர்த்தியமாகக் கூறுகிறார். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமமும் அன்னையை "காலஹந்த்ரீ(557) - காலனை அழிப்பவள் என்று சொல்கிறது. காலனை அழித்து, கணவனுக்கு "கால காலன்"

என்ற சிறப்புப் பெயரையும் உண்டாக்கினவள் அன்னை. என்னே! அன்னையின் பதிபக்தி!

**அருநீலகண்டன்:** தேவர்கள் உய்ய நஞ்சுண்ட அரிய செயலைச் செய்த நீலகண்டன்.

அருணகிரிநாதரும், திருக்கடவூர் திருப்புகழில் (ஏட்டின்)

*"கூற்று மரித்திட வேஉதை பார்வதி*
*யார்க்கும் இனித்த பெண் ஆகிய மான்மகள்*
*கோட்டு முலைக்கதிபா! கடவூர் உறை பெருமானே"*-என்பர்.

அதாவது, யமன் இறந்து போகும்படி உதைத்தது அன்னை பார்வதி தேவியார் என்று தெள்ளத் தெளிவாய் கூறுகிறார்.

## 11. நான் உன் சேய், நீ என் தாய்!

*சகல செல்வங்களும் தரும் இமய கிரிராச*
*தநயை! மாதேவி! நின்னை*
*சத்யமாய் நித்யம் உள்ளத்தில் துதிக்கும் உத்*
*தமருக்கு இரங்கி மிகவும்*
*அகிலம் அதில் நோய் இன்மை, கல்வி, தனதானிய(ம்) மெய்*
*அழகு புகழ் பெருமை இளமை*
*அறிவு சந்தானம் வலி துணிவு வாழ்நாள் வெற்றி*
*ஆகும் நல்ஊழ் நுகர்ச்சி*
*தொகை தரும் பதினாறு பேறும் நீ தந்து அருள்*
*சுகாநந்த வாழ்வு அளிப்பாய்!*
*சுகிர்த குணசாலி! பரிபாலி! அநுகூலி! திரி*
*சூலி! மங்கள விசாலி!*
*மகவு நான்; நீ தாய்: அளிக்கொணாதோ? மகிமை*
*வளர் திருக்கடவூரில் வாழ்*
*வாமி! சுபநேமி! புகழ்நாமி! சிவசாமி மகிழ்*
*வாமி! அபிராமி! உமையே!*

நலந்தரும் நற்குணச் செல்வியே! அனைத்தையும் பரிபாலிப் பவளே! உயிர்களுக்கு நன்மை செய்பவளே! முத்தலைச் சூலம் ஏந்தியவளே! மங்கலம் தருபவளே! பெருமை மிகு திருக்கடவூரில் வாழும் தேவியே! நன்மை மிக்க சக்கரப்படை

ஏந்தியவளே! பல நாமங்களால் புகழப்படும் தேவியே! சிவபெருமான் மகிழும் தேவியே! அபரிமிதமான அழகுடைய அபிராமியே! உமையம்மையே!

அபிராமி அம்மை முதற் பதிகத்தின் முதல் பாடலில் அன்னை அபிராமியிடம் பதினாறு பேறுகளைத் தந்தருளுமாறு வேண்டிய அபிராமி பட்டர் மீண்டும் இங்கு அவற்றை நினைவுபடுத்துவது ஒரு தாயிடம் சேய் மீண்டும், மீண்டும் கேட்பது போல் இருக்கிறது.

சகல செல்வங்களையும் அருளும் இமய மலையரசன் திருப்புதல்வியே! என்றும் உன்னைச் சத்தியமாய் உள்ளத்தில் நினைக்கும் உத்தமர்களுக்கு இரங்கிப் பிணியில்லா வாழ்வு, கல்வி, தனம், தான்யம், உண்மை, அழகு, புகழ், பெருமை, இளமை, அறிவு, சந்தானம், வலிமை, துணிவு, நீண்ட வாழ்நாள், வெற்றி, நல்வினைகளின் அனுபவம் என்னும் பதினாறு பேறும் 'நீ' தந்து பேரானந்தப் பெருவாழ்வு தருவாய்!

நான் உன் குழந்தை. நீ என் தாய்! எனவே எனக்கு அந்தப் பதினாறு பேறுகளையும் தந்தருள்வாய் என்று நம் பொருட்டு அன்னையிடம் வேண்டுகிறார் அன்னையின் அருள் மைந்தன் அபிராமி பட்டர்.

இத்துடன் அபிராமி அம்மை பதிகம் - II பூர்ணமாகிறது.

வாழ்க அபிராமி பட்டர்!

வாழ்க அன்னை அபிராமி அருள்!

அன்னை அபிராமியின் திருவடிகளுக்கு அடியேன் எப்போதும் சரணமடைகிறேன்!

# அபிராமி அம்மை பதிகம் - III

அபிராமி பட்டர் இயற்றியருளிய அபிராமி அம்மையின் மூன்றாவது பதிகம் பத்து பாடல்களைக் கொண்டது. இதன் சிறப்பு அம்சம் யாதெனில், எல்லாப் புகழையும் திருக்கடவூர் இறைவன் மேல் ஏற்றிப் பின் அவரை ஆளும் செல்வி அபிராம வல்லியே என்று சொல்வதாகும். அபிராமி அந்தாதியில்(87), "விழியால் மதனை அழிக்கும் தலைவர் அழியா விரதத்தை அண்டமெல்லாம் பழிக்கும் படியொரு பாகம் கொண்டு ஆளும் பராபரையே" என்று கூறுவர். அதாவது அன்னை எல்லா வற்றிற்கும் மேலானதொரு சக்தியாகும். இதுதான் சாக்த தத்துவத்தின் உட்பொருள். வாக்தேவதைகள் அன்னையை ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் "ஸர்வேச்வரீ"(202) என்று பெருமிதத்துடன் அழைக்கின்றார்கள். அன்னையே அனைத்திற்கும் இறைவி.

ஆதிசங்கரரும் ஸௌந்தர்யலஹரீயில்(25-26) அன்னையே ஆதிமூலம். அவளுடைய திருவடிகளில் செய்யப்படும் பூஜை அனைத்து தெய்வங்களையும் பூஜித்ததாகி விடுகிறது என்று கூறுகிறார். சிவபெருமானே அன்னையை வணங்குவதை - "சிவாராத்யா" ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்(406) "ஹராராத்யா" ஸ்ரீ லலிதா த்ரிசதீ(105) என்னும் நாமங்களால் அறிகிறோம்.

திருமூலரும் (திருமந்திரம் - 1053)

*"அவளை அறியா அமரரும் இல்லை*
*அவளன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை*
*அவளன்றி ஐவரால் ஆவதொன்றில்லை*
*அவளன்றி ஊர் புகுமாறு அறியேனே"*

என்று கூறுவர். இதன் கருத்து அன்னை அனைத்திற்கும் அரசி. சக்தியின் துணையில்லாமல் முக்தி அடைய முடியாது. (405)சிவதூதீ - சிவனே அன்னையின் அன்புக் கட்டளைக்கு உட்பட்டு தூதனாகச் சென்ற பெருமையுடையவள். (சும்ப, நிசும்பர் போரில்)

### 1. ஸத்சங்கம் அருளுவாய்!

*காலம் உண்டு புனல் உண்டு பூ உண்டு*
*கனிகள் உண்டு கவுமாரீ நின்திருக்*
*கோலம் உண்டு இதை உட்கொண்டு தொண்டரைக்*
*கூடிக்கொண்டு குலாவித் திரிந்திலேன்*
*ஞாலம் உண்ட திருமாலும் தேவரும்*
*நாணி ஓட நரலையிலே எழும்*
*ஆலம் உண்ட கடவூர் இறைவரை*
*ஆளும் செல்வி! அபிராம வல்லியே!*

உலகம் உண்ட திருமாலும், தேவர்களும் அஞ்சி வெட்கப் பட்டு ஓடப் பாற்கடலில் தோன்றிய ஆலகால நஞ்சை உட்கொண்டு அனைவரையும் ரட்சித்து அருள்புரிந்த திருக்கடவூர் இறைவரை ஆளும் நாயகியே! அளவிட முடியாத அபரிமிதமான அழகுக் கொடிப்போன்ற அபிராமவல்லியே!

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில்(71) ஓம் பூ கர்ப்பாய நம: என்று வரும். பூமியைத் தமது வயிற்றினுள் வைத்துக் காப்பவர். ஆயர்பாடியின் அமளியை அடக்கக் கண்ணனை யசோதை உரலில் கட்டியபோது உலகனைத்தும் வயிற்றில் கட்டுண்டு அமளிப்படும் ஓசையை யோக மாயையால் யசோதை கேட்கலானாள். கண்ணன் மண் தின்றதைச் சோதிக்க வாயைத் திறக்கச் சொன்னபோது அவன் வாயினுள் உலகங் கண்டாள். (722)-ஓம் ஏகபதே நம: உலகனைத்தும் தமது ஒரு பாதத்தில் அல்லது பகுதியில் அடக்கியவர்.

பூஜைகள் செய்ய நிறைய நேரம் இருக்கிறது. உன் மூர்த்திக்கு அபிஷேகம் செய்ய நீருக்கு பஞ்சமில்லை. உன்னை

---

குறிப்பு : திருக்கடவூர் ப்ரபந்தத்திரட்டு (நவம்பர்-1980) தொகுத்தளித்தோர்: தவத்-திரு. ஸாதுராம் ஸ்வாமிகள், அவரது தமையனார் அருள் இசைமணி ஸ்ரீ ஸு.வே. ஸுப்ரம்மண்யன். இவர்கள் அபிராமி பட்டர் பரம்பரையைச் சேர்ந்த ஸ்ரீ அமிர்த பாரதியார், ஸ்ரீ ராமைய பாரதியார் இருவரையும் திருச்சியில் சந்தித்து (28.1.1975) அபிராமி அம்மையின் மூன்று பதிகங்களின் கைப் பிரதிகளைப் பார்த்து பின்னர்தான் மூன்றாம் பதிகத்தை வெளியிட்டனர். மேலும் அபிராமி அம்மை முதல் இரண்டு பதிகங்களுக்கும் சரியான பாடங்களையும் தந்துள்ளனர். முதன் முதலாக மூன்றாம் பதிகத்தை வெளியிட்ட பெருமை இவர்களைச் சாரும்.

அர்ச்சனை செய்ய பூக்கள் உண்டு! உனக்கு நிவேதனம் செய்ய கனிந்த பழங்கள் உண்டு. நெஞ்சில் பதித்து வழிபடக் கவுமாரியே! உன் திருக்கோலம் உண்டு. இவற்றையெல்லாம் அறிந்து உணர்ந்து தொண்டர்களுடன் கூடி, அவர்களுடன் குலவளாவி இருக்கும் இன்பத்தை அடைந்தேன் இல்லையே!

அம்மா! உன்னை அர்ச்சிக்கவும், ஆராதனை செய்யவும், எப்போதும் உன் தொண்டர்களுடன் கூடி, ஸத்சங்கத்திலேயே இருக்கவும் நீயே அருள் புரிய வேண்டும் என்று அன்புக் கட்டளை விடுக்கிறார் அன்னையின் மைந்தன் அபிராமி பட்டர்! அன்னையை உபாஸிக்க அவள் அருள் செய்தாலன்றி முடியாது.

## 2. பிறப்பு, இறப்பு தவிர்ப்பாய்!

*துஞ்சல் என்று உடன் தோன்றுதல் என்றுமாய்ச்*
*சுழலும் வண்டு எனச் சுற்றித் திரிந்தபின்*
*மிஞ்சல் ஒன்றையும் காணேன் இதற்கு இனி*
*மேல் எனக்கு ஒரு மெய்வழி காட்டுவாய்!*
*உஞ்சல் என்று அழகாய் அக் கொடும் பகடு*
*ஊரும் கூற்றை உதைத்துச் சிறுவனை*
*அஞ்சல் என்ற கடவூர் இறைவரை*
*ஆளும் செல்வி! அபிராம வல்லியே!*

திருக்கடவூர் - காலனை அழித்து "காலகாலன்" என்று பெயர் சூடிய சிவபெருமானின் "கால ஸங்கார க்ஷேத்ரம்". வாழ்நாளில் அனைவரும் சென்று வணங்க வேண்டிய புண்ய ஸ்தலம்.

இயற்கையையே மாற்றி அமைத்து, பக்தர்களுக்கு அருள் புரிந்த சிவனும், உமையும் உறையும் இடம் திருக்கடவூர். (காலன் அழிந்தது, அமாவாசை பௌர்ணமியானது).

அபிராமி அம்மை இரண்டாவது பதிகத்திலும் (10) யமனை ஸம்ஹாரம் செய்து, தன் பக்தன் மார்க்கண்டேயனை என்றும் சிரஞ்சீவியாக்கிய கருணாமூர்த்தி சிவபெருமானின் பெருமையைச் சொல்லிப் புகழ்கிறார். இதுவும் அன்னையின் பேரருளின் சிறப்பு என்று சொன்ன அபிராமி பட்டர், இப்பாடலில், இன்னும் ஒரு படிமேலே சென்று, "சிறுவனை அஞ்சல் என்ற கடவூர் இறைவரை ஆளும் செல்வி! அபிராமவல்லியே!" என்று உரைப்பது அன்னையே அனைத்தையும் ஆளும் நாயகி என்று

உலகோர் உணர வேண்டும் என்ற கருத்துடையது. இனி பாடலின் பொருளைப் பார்ப்போம்.

"நீ பிழைப்பாயோ!" என்று ஆங்காரமாய் மார்க்கண்டேயனை நோக்கி, கருத்த பயங்கரமான எருமைக்கடா (பகடு) மீது அமர்ந்து காலன் வருகிறான். "அஞ்சாதே நீ" என்று திருக்கடவூரை ஆளும் இறைவனான சிவபெருமான் மார்க்கண்டேயனிடம் கூறி, காலனை உதைத்து அச்சிறுவனுக்கு அபயம் தந்து அருள் புரிகிறார். காலனுக்கு காலனாய் நின்ற அச்சிவபெருமானை ஆளும் நாயகியாய் திகழ்கிறாள் அழகிய கொடி போன்றவளான அபிராமவல்லித் தாயார்!

இறப்பு (துஞ்சல்) என்றும் பிறப்பு என்றும் வரும் சுழற்சியில் ஒரு வண்டைப்போல் சுழன்று சுற்றித் திரிந்த பின்னர் மிஞ்சுவது எதையும் காணவில்லை! அம்மா! இந்த பிறப்பு, இறப்பு என்று தவறாது வரும் தொடரில் இருந்து விடுபட எனக்கு ஒரு மெய்யான வழியைக் காட்டி அருள்வாய்!

அபிராமி அந்தாதியில், "சுந்தரி எந்தை துணைவி என் பாசத் தொடரை எல்லாம் வந்தரி"(8) என்று வருவது காண்க. "ததியுறு மத்திற் சுழலும் என் ஆவி தளர்விலதோர் கதியுறு வண்ணம் கருதுகண்டாய்..."(7)

ஆதிசங்கரர், பஜகோவிந்தத்தில், "புனரபி ஜனனம் புனரபி மரணம்" என்று சொல்கிறார்.

பட்டினத்தாரும்

"*மாதாவும் உடல் சலித்தாள், வல்வினையேன் கால் சலித்தேன்*
*வேதாவும் கை சலித்து விட்டானே*" - என்பார்.

மாணிக்கவாசகரும் சிவபுராணத்தில் (திருவாசகம்)

"*புல்லாகி பூடாய் புழுவாய்.....*
*எல்லா பிறப்பும் பிறந்திளைத்தேன்*"

என்று கூறுவார். அதாவது அனைத்து பக்தர்களும் வேண்டுவது "பிறவா நிலை".

பகடு என்ற சொல் யானையையும், எருதையும் குறிக்கும். அன்னை அபிராமியின் அடியார்களைத் தொழும் அடியாருக்கு

"பல்லியம் ஆர்த்தெழ வெண்பகடு ஊரும் பதம் தருமே" என்று அபிராமி அந்தாதியில்(91) வரும். அதாவது, பல வாத்தியங்கள் ஒலி எழுப்ப, வெள்ள யானை (ஐராவதம் - தேவேந்திரன் அமரும் யானை) மீது அமரும் பதவியும் (இந்திர பதவி) கிடைக்கும் என்று பொருள்.

இங்கு "கொடும் பகடு" என்பது யமன் அமரும் எருதினைச் சொல்லும். என்னே அபிராமி பட்டரின் கவிதா விலாசம்! ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்(851). ஜன்ம - ம்ருத்யு - ஜரா - தப்த - ஜன - விச்ராந்தி - தாயினீ: பிறப்பு, இறப்பு, மூப்பு, ஆகிய துன்பங்களில் தவிக்கும் ஜனங்களுக்கு உத்தமமான மோட்ச சுகமாகிய சாந்தியை அளிப்பவள். (201)ஸத்கதிப்ரதா: நல்ல கதியைத் தருபவள். (114)பவாரண்ய குடாரிகா: சம்சாரமாகிய காட்டை அழிக்கும் கோடரி போன்றவள்.

### 3. வறுமையில்லா வாழ்வளிப்பாய்!

*உம்பலைக் குறும்கார் இரும்பு ஆகியது*
*உள் உடைக்கும் படிமிடி மேற்படப்*
*பம்பு அலைக்குள் சுழல்துரும்பு ஆகிஅப்*
*பதங்கில் ஏசற்றுப் பாழ்த்திடில் இன்பமோ?*
*கம்பலைக் குடம் காவிரி பாய்ந்திடும்*
*கழனி தோறும் கதிர்த்தரளங்களை*
*அம்பு அலைக்கும் கடவூர் இறைவரை*
*ஆளும் செல்வி! அபிராம வல்லியே!*

பாயும் இடந்தோறும் வயல்தோறும் ஒளிமிக்க முத்துக்களை வாரி இறைக்கும் காவிரி பாய்ந்து வளம் சேர்க்கும் திருக்கடவூரில் எழுந்தருளியுள்ள இறைவரை ஆளும் செல்வியே! அளவிட முடியாத அபரிமிதமான அழகுக் கொடி போன்ற அபிராம வல்லியே!

பெரிய வலிமை மிக்க யானையை கறுத்த இரும்பினால் ஆன சிறிய, குறுகிய அங்குசம் அடக்கும். அதுபோல் வறுமை என்னைப்பற்றி வாட்ட, பெரிய நீர் அலைக்குள் அகப்பட்ட துரும்பு போலாகி அந்தப் பாழுங்குழியில் அகப்பட்டு நான் பாழாவது உனக்கு மகிழ்ச்சியா?

அதாவது, நான் பட்டினியால் வாடினால் நீ சிரித்துக் கொண்டு இருப்பாயோ? என்று தாயை சேய் கேட்பது போல் உள்ளது!

இம்மண்ணுலகில் இருக்கும் தாய்மார்களும் தன் குழந்தைகள் வீட்டிற்குத் திரும்பி வரும்போது, முதலில் கேட்கும் கேள்வி - "நீ சாப்பிட்டாச்சா?"என்று தானே! மண்ணுலகத் தாய்க்கே இப்படி ஒரு பாசம் உண்டென்றால் அனைவருக்கும் தாயான அன்னை அபிராமியைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?

அன்னை, தன்னை மட்டுமல்லாது அனைவரையும் வறுமைப் பிடியில் அகப்படாது காத்தருளுவாள் என்று உலகோர்க்கு புரிய வைக்கிறார் அபிராமி பட்டர்.

## 4. பாவிகளின் பின் செல்லாமல் காப்பாய்!

*முலை அசைக்கும் பரத்தையர் ஆசையில்*
*மூழ்கி மூழ்கி முதுவரி ஒந்தி போல்*
*தலை அசைக்கும் பதிதரைப் பின் சென்று*
*சஞ்சரிப்பது கொஞ்சமதோ? சொலாய்!*
*குலை அசைக்கும் குரங்கு இளம் தெங்கினில்*
*குதித்து அசைக்கக் குடவால் வளை எறிந்து*
*அலை அசைக்கும் கடவூர் இறைவரை*
*ஆளும் செல்வி! அபிராம வல்லியே!*

வானரங்கள் தென்னை மரத்தில் ஏறித் தென்னங்குலை களை அசைக்கத் தேங்காய்கள் விழ, அதனால் சங்குகளை எறியும் அலைகள் மிக்க நதிவளமுடைய திருக்கடவூர் இறைவரை ஆளும் தலைவியே! அபரிமிதமான அழகுடன் கொடி போல் விளங்கும் அபிராமவல்லியே!

தனங்களை அசைத்து மயக்கம் உண்டாக்கும் பரத்தையர் மேல் கொண்ட ஆசையில் மீண்டும், மீண்டும் மூழ்கி அவர்கள் சொல்வதற்கெல்லாம் தலையாட்டும் பாவிகளின் பின் சென்று திரிவது கொஞ்சமோ? அம்மா! நீயே சொல்வாயாக!

இப்பாடலின் கருத்து : வலிமை மிக்க பெண்ணாசையை ஒழித்து, பாவியர் பின் செல்லாத நல்ல மனத்தை நீயே தான் அருள வேண்டும் என்று அன்னையிடம் மனம் திறந்து கேட்கிறார்.

மாணிக்க வாசகரும் திருவாசகத்தில் (நீத்தல் விண்ணப்பம்-27)

*"கொழும் மணி ஏர்நகையார் கொங்கைக்*
*குன்றிடைச் சென்று குன்றி*
*விழும் அடியேனை விடுதி கண்டாய்!*
*மெய்ம் முழுதும் கம்பித்து*
*அழும் அடியாரிடை ஆர்த்து வைத்து*
*ஆட்கொண்டருளி என்னைக்*
*கழுமணியே இன்னும் காட்டு கண்டாய்*
*நின்புலன் கழலே."*

மாதருடன் கலந்து சிற்றின்பம் துய்த்து அழிந்துபோம் அறிவிலியாகிய என்னைக் காப்பாற்ற மாட்டாயா? அன்பால் உடல் முழுவதும் நடுங்கி அழுகின்ற பக்தர்களோடு என்னை சேர்த்து வை. மாசிலாமணியே! உனது ஞான சொரூபத்தை எனக்கு காட்டியருள்க.

ஆதிசங்கரரும் பெண்ணாசையை அறவே அழித்து, இந்திரியங்களை நல்வழியில் திருப்பி, காமத்தை வென்றவனே (காமஜயம்) அம்பாளின் திருவடியை அடைய முடியும் என்று ஸௌந்தர்யலஹரீயில் சொல்கிறார். ஸ்லோகம்(95)ல், "இந்திரன் முதலான தேவர்களும் தேவியின் சமீபம் சென்று பாதாரவிந்தங் களில் பூஜை செய்ய வேண்டும் என்று ஆசைப்பட்டபோதிலும் அவ்வாசை பூர்த்தியடைவதில்லை. வெளிவாயிலில் நின்று சேவை புரியும் அணிமாதி சித்திகளால் இந்திராதி தேவர்கள் அங்கேயே நிறுத்தப்படுகிறார்கள். சித்திகளை அடைந்து அதற்கு மேல் அவர்கள் செல்லத் தகுதியற்றவர்கள் ஆகின்றனர்." (தேவர்கள் எப்போதும் போகத்தில் திளைப்பவர்கள்)

அபிராமி பட்டர் ஒரு தலைசிறந்த ஸ்ரீவித்யா உபாசகர். அபிராமி அந்தாதியில் அன்னையைத் துதிப்போருக்கு "இந்திர பதவி" கிடைக்கும் என்று சொல்லி, அத்துடன் நில்லாது, அன்னை முக்தியையும் தருவாள் என்பார். அதாவது அன்னையைத் தொழும் உத்தம பக்தர்கள் தேவலோகப் பதவியை விடுத்து அன்னையின் திருவடியில் முக்தி அடைவதையே விரும்புவர் என்று குறிப்பிடுகிறார்.

காஞ்சீ மஹாபெரியவரும், "அம்பாளுடைய கடாக்ஷம் கிடைத்தால் எவ்வளவு காமத்தை உண்டு பண்ணும்படியான வஸ்துவா யிருந்தாலும அது காமத்தை உண்டு பண்ணாது" என்கிறார்.

அபிராமி பட்டரோ ஒரு மாபெரும் மகான். ஜீவன் முக்தர். இப்பாடலில் "பெண்ணாசை" அழிய வேண்டும் என்று அன்னையிடம் உருக்கமாக வேண்டுவது, மெய்யன்பர்களின் நலன் கருதியே என்று நாம் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும்!

## 5. நின் கமலவிழி பார்வை தந்தருள் தாயே!

*கண்டு அரைத்துப் பிழிந்தது போல் சொலும்*
*கவியைச் சாடும் கவியை ஒப்பு ஆகிய*
*வண்டர் அண்டையில் கொண்டு சொல்லாமல் உன்*
*வனசப்பார்வை வழங்கில் குறையுமோ?*
*தொண்டர் போற்றக் கலயனும் போற்ற மெய்ச்*
*சுருதி போற்று (அ)ச் சுதன் போற்ற வாசவன்*
*அண்டர் போற்றும் கடவூர் இறைவரை*
*ஆளும் செல்வி! அபிராம வல்லியே!*

தொண்டர்கள் போற்றித் துதிக்கிறார்கள். சிறந்த சிவனடியா ரான குங்கிலியக் கலய நாயனார் போற்றி வணங்குகிறார். வேதம் போற்றும் திருமால் போற்றுகிறார். இந்திரன் முதலான தேவர்கள் போற்றி வணங்குகிறார்கள். யாரை? திருக்கடவூரில் எழுந்தருளி யுள்ள இறைவன் - சிவபெருமானை! அத்தகைய பெருமை பெற்ற ஈசனையும் ஆளும் தலைவியாய்த் திகழ்கிறாள் அளவிட முடியாத அபரிமிதமான அழகுக் கொடியான அபிராமவல்லி!

கரும்பை அரைத்து பிழிந்து எடுத்தது போல் இனிமை யான பாடல்களை, கிளைக்குக் கிளை தாவும் குரங்குக்குச் சமமான தகுதியற்ற அற்பர்கள் முன் சொல்லாமல், உன் தாமரை போன்ற அழகிய விழிப்பார்வையில் வைத்தால் அக் கவியின் பெருமை குறைந்து விடுமோ?

**பாடலின் கருத்து:** அன்னையின் கடைக்கண் பார்வை பட்டால் எதுவும் சிறக்கும் என்பதே.

அபிராமி அம்மை முதல் பதிகத்தில்(3) "நின் செங்கமல விழியருள் வரம் பெற்ற பேர்கள் அன்றோ..." என்றும், இரண்டாவது பதிகத்தில்(6) "நினது பூரண கடாஷ வீட்சண்ணியம் செய்து..." என்றும், பணிவுடன், பக்தி ததும்பக் கூறி அன்னையின் கடைக்கண் பார்வையை தந்து அருள்புரிய

வேண்டுகிறார் அபிராமி பட்டர். அபிராமி அந்தாதியின் சிறப்பு மிக்க பாடலான, "தனம் தரும்...."(69) என்ற பாடல் "கனந்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே" என்று முடிகிறது.

அன்னையின் கடைக்கண் பார்வையில், ஏன் அபிராமி பட்டர் கண்ணும் கருத்துமாய் இருக்கிறார்?

அப்படியென்ன பெருமை? என்பதை உணர்த்தும் வகையில் அமைந்துள்ளது ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் 614. ஸசாமர ரமா வாணீ ஸவ்ய தக்ஷிண ஸேவிதா - திருமகள் (இடது பக்கம்) கலைமகள் (வலது பக்கம்) ஆகிய இருவரும் அன்னைக்கு இருபுறத்திலும் நின்று சாமரம் வீசிக் கொண்டிருக்கிறார்களாம். அதாவது அன்னையின் கடைக்கண் பார்வை எப்போது கிடைக்கும் என்று ஏங்குகிறார்களாம் என்பதே ஆழ்ந்த கருத்து.

(திருக்கடவூரில் மறையவர் குலத்துதித்தவர்) குங்குலியக் கலய நாயனார்:- இவர் அபிராமி பட்டருக்கு முன் காலத்தவர். இவர் இயற்பெயர் - கலயர். நாள் தவறாது தினமும் சிவபெருமானுக்கு குங்குலியப் (குங்குமப்பூ) புகை போட்டு வந்தார். திருவருட்செயலால் இவருக்கு வறுமை உண்டாயிற்று. வீட்டில் உள்ள எல்லா பொருளையும் விற்று தினமும் குங்குலியப் புகை போடுவதை நிறுத்தாமல் செய்து வந்தார். ஒரு நாள் இவருடைய மனைவியார், தம் மக்களும் சுற்றத்தினரும் வருந்துதலைக் கண்டு, தம்மிடம் எஞ்சியிருந்த திருமாங்கல் யத்தினை நாயனாரிடம் தந்து அரிசி முதலியன வாங்கி வர அனுப்பினார். அதை வாங்கிக் கொண்டு, தெருவில் செல்லுகையில் எதிரில் வணிகன் ஒருவன் குங்குலியப் பொதி கொண்டு வருதலைக் கண்டு மனமகிழ்ச்சி அடைந்து, அவனிடம் திருமாங்கல்யத்தைக் கொடுத்து, அக்குங்குலிய மூட்டையைப் பெற்று, உடனே ஈசனுக்கு (வீட்டிற்குச் செல்லாமல்) குங்குலியப் புகை போட ஆரம்பித்து தன்னையே மறந்து ஆனந்தத்தில் திளைத்தார். ஈசன் இச்செயலினால் பெருமகிழ்ச்சி அடைந்து குங்குலியக் கலய நாயனார் வீடு முழுவதும் நெல்லும், பொன்னும், பொருளும், ஆடையும், ஆபரணமும் நிரம்பும்படி செய்து, அவர் முன்தோன்றி, "அன்பனே! நீ வீடு சென்று அமுது அருந்துக!" என்றருளிச் செய்து மறைந்தார்.

## 6. காலன் வருமுன் வந்து காத்தருள்வாய்!

*தீத ரிக்கும் தமியேன் என் ஆருயிர்*
*சிந்த அந்தகன் வந்திடு முந்தியே*
*நீத ரிக்கும் சிலையொடு வந்து முன்*
*நிற்பதே அன்றிச் சற்பனை செய்வையோ!*
*ஓத ரிக்கும் விதிக்கும் எட்டாப் பதம்*
*உதவி மைந்தன் மதி மயங்காமலும்*
*ஆத ரிக்கும் கடவூர் இறைவரை*
*ஆளும் செல்வி! அபிராம வல்லியே!*

தன்னைப் புகழ்ந்து பாடும் திருமாலுக்கும், பிரமனுக்கும் எட்டாத திருவடிகளை, அடியேனை மகனாகக் கருதி, அருளித் தந்து, அடியேன், அறிவு தடுமாறாமல் ஆதரிக்கும் திருக்கடவூர் இறைவனை ஆளும் நாயகியே! அபரிமிதமான அழகுடைய கொடி போன்ற அபிராமவல்லியே!

தீமையிலேயே உழலும் என்னுயிரைக் கொண்டு செல்ல எமன் வருவதற்கு முன்பே 'நீ', உன் கையில் தாங்கியுள்ள கரும்பு வில்லுடன் வந்து என் முன் நிற்க வேண்டும். அவ்வாறு செய்யாமல் என்னை வஞ்சிப்பாயோ? மாட்டாய் அல்லவா! (காலன் வருமுன்னே, அன்னை வந்து காத்தருள வேண்டும்!)

அபிராமி பட்டர், அபிராமி அந்தாதியிலும், அபிராமி அம்மை பதிகங்களிலும் ஆங்காங்கே, "நான் உன் சேய். நீ என் தாய்" என்று அன்னை அபிராமியிடம் சொல்வது அவருடைய அன்னை பக்தியைக் காட்டுகிறது அல்லவா! அல்லும் பகலும் அன்னையின் திருவடிகள் நினைப்பிலேயே வாழ்ந்தவர்.

அபிராமி அந்தாதியில்(86) "மால் அயன் தேட மறை தேட வானவர் தேட நின்ற காலையும்...." என்று கவிநயத்துடன் வெகு அழகாகச் சொல்கிறார். அதாவது, அன்னையின் திருவடியை திருமால், பிரமன், வேதங்கள், தேவர்கள் தேடி அலைந்தும் காணமுடியவில்லை."தேட நின்ற காலையும்..." என்ற பொருள் நயம் வெகு பிரமாதம். தேடினார்களேயன்றி, கிடைக்கப் பெற்றிலர் என்பதை நாம் புரிந்து கொள்கிறோம்.

திருமால் பன்றி உருவம் கொண்டு பாதாளம் வரை சென்று எவ்வளவோ முயன்றும் சிவபெருமானின் திருவடியைக் காண

முடியவில்லை. பிரமனும் அன்னப்பட்சியாய் உயரப் பறந்து தேடியும் திருமுடியைக் காணவில்லை. சிவன் எல்லாவற்றிற்கும் மேம்பட்ட பரம்பொருள் அல்லவா! ஆனால் பக்தியினால் துதிப்போர்க்கு அவனே வலியவந்து ஆட்கொள்வான் என்று மாணிக்கவாசகர் (திருவாசகம்) சொல்வது காண்க. (சிவனும், சக்தியும் ஒன்றுதானே!)

### 7. காமக் குழியில் விழாது காத்தருள்வாய்!

*ஒழிவு இலாத கொடுங்காமக் கும்பியில்*
*உணர்வு இலாதழும் ஊர்ப்பன்றி போல நான்*
*இழிவு இலாதபடி என் அளவும் நீ*
*இரங்கிடாததும் ஏதோ? அறிந்திலேன்*
*பொழிவு இலாது அப்புரந்தரன் ஆகியோர்*
*பொன்று காலத்தும் பொன்றாது எக்காலத்தும்*
*அழிவு இலாத கடவூர் இறைவரை*
*ஆளும் செல்வி! அபிராம வல்லியே!*

மேன்மையில்லாத இந்திரன் முதலியோர் ஒரு காலத்தில் அழிந்தொழிவர். ஆனால் என்றும் அழியாது நின்றருளும் திருக்கடவூர் இறைவனை ஆளும் தேவியே! அளவிட முடியாத அபரிமிதமான அழகுடைய கொடி போன்ற அபிராமவல்லியே!

ஓய்வு இல்லாது கொடிய காமக் குழியில் விழுந்து உழன்று, மெய்யுணர்வே இல்லாது வருந்தியழும் ஊர்ப்பன்றி போன்ற என்னை இழிவுபடாமல் வாழ 'நீ' சிறிதேனும் இரக்கம் காட்டாதது ஏனோ? நான் அறியேன்.

அம்மா! நீயேதான் உன் அன்பனைக் காமப் படுகுழியில் விழாமல் காத்தருள வேண்டும் என்பது குறிப்பு.

ஆதிசங்கரர் ஸௌந்தர்யலஹரீயில் (ஸ்லோகம்-28 ஸுதா மப்யாஸ்வாத்ய) "பயங்கரமான மூப்பு, மரணங்களை விலக்குகிற அமிருதத்தை சாப்பிட்டும் கூட பிரம்மா, இந்திரன் முதலிய எல்லா தேவர்களும் பிரளய காலத்தில் அழிவுறுகிறார்கள். கொடிய விஷத்தை சாப்பிட்ட சிவனுக்கு காலத்தின் முடிவு இல்லை என்றால் அதன் காரணம் உன்னுடைய காதிலுள்ள தாடங்க மகிமைதான்" என்று தேவியிடம் கூறுகிறார்.

*ஸ்ரீ ருத்ரத்திலும்,*

*"யாதே ருத்ர சிவாதனூ: சிவா விச்வாஹ பேஷஜீ |*
*சிவா ருத்ரஸ்ய பேஷஜீ தயா நோ ம்ருட ஜீவஸே ||"*

**இதன் கருத்து:** "விஷத்தை உண்டும் அன்னையின் அருளால் தான் சிவன் உயிருடன் உள்ளார்"

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்தில்(232) மஹேச்வர - மஹாகல்ப - மஹா தாண்டவ ஸாக்ஷிணீ. மஹா பிரளய காலத்தில் எல்லாம் அழிந்தும், அழியாமல் எஞ்சி நிற்பவர்கள் சக்தியும், சிவன் மட்டும் தான். அப்போது சிவன் மஹா தாண்டவம் செய்வதை பராசக்தி மட்டும் சாட்சியாக பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

இந்தக் காட்சியை மூக கவி தன் ஸ்துதி சதகத்தில்(100) வெகு அழகாக வர்ணிக்கிறார்.

*"க்வணத் காஞ்சீ காஞ்சீபுர மணி விபஞ்சீலய ஜரி-*
*சிர:கம்பா கம்பாவசதிரனு கம்பா ஜல நிதி: |*
*கன ச்யாமா ச்யாமா கடின குசஸீமா மனசி மே*
*ம்ருகாக்ஷீ காமாக்ஷீ ஹர நடன சாட்சி விஹரதாம்: ||"*

சப்திக்கின்ற ஒட்டியாணத்தை அணிந்தவளாயும், காஞ்சீ புரத்தில் இருப்பவர் வாசிக்கின்ற ரத்ன வீணையின் ப்ரவாகம் போன்ற ஸ்வர மேளத்தால் சிரஸ்கம்பம் செய்கின்றவளாயும், கம்பைக் கரையில் வசிக்கின்றவளாயும், கருணையின் கடலாயும், மேகம் போன்ற கறுத்த திருமேனி உள்ளவளாயும், பதினெட்டு வயது பிராயத்தவளின் யௌவனத்தைக் கொண்டவளாயும், கடினமான ஸ்தன மண்டலம் உள்ளவளாயும், மானின் விழி போன்ற விழிகளுடையவளாயும், ஹரனுடைய திருநடனத் திற்கு சாட்சியாக இருக்கின்ற காமாக்ஷியானவள் என் மனதில் திருவிளையாடல் புரியட்டும்.

### 8. கரும்பு வில்லுடன் வந்து என் துயர் துடைப்பாய்!

*கன்று அருந்துயர் தீர்க்கும் பசுவின்நீ*
*கன்னல் வில்லுடன் என் அருகில் வந்து*
*நின்று அருந்துயர் நீக்கி நன்று ஆக்கி வெண்*
*நீறு அணிந்து உளம் ஏய்ரண மாற்றுவாய்!*

*பொன் தரும் துயல் பூண் முலை மார்பெறப்*
*பொருந்து நீ எனப் போந்து பலி இரந்து*
*அன்று அருந்தும் கடவூர் இறைவரை*
*ஆளும் செல்வி! அபிராம வல்லியே!*

பொன் ஆபரணங்களைத் தன் திருத்தனங்களின் மேல் அணிந்து, பிச்சை கேட்டு உண்ணும் திருக்கடவூர் இறைவனை தன்னிடம் குழையச் செய்து அவனை ஆளும் செல்வியே! அளவிடமுடியாத அபரிமிதமான அழகுடைய கொடி போன்ற அபிராமவல்லியே!

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் இந்தக் கருத்தினை வாக் தேவதைகள் காவ்யரஸனையுடன் சொல்லும் நாமம் இது! 33. காமேச்வர - ப்ரேமரத்ன - மணிப்ரதிபண - ஸ்தனீ - காமேச்வர ருடைய அன்புபெனும் சிறந்த ரத்னமணிக்கு பதிலாக அல்லது விலையாகக் (இரட்டிப்பாக) கொடுக்கிற ஸ்தனங்களை உடையவள்.

அபிராமி பட்டரும் வெகு அழகாக இந்தக் காட்சியை (அபிராமி அந்தாதி-38) "துவளப் பொருது துடியிடை சாய்க்கும் துணை முலையாள்..." என்று வர்ணிக்கிறார். அபிராமி அந்தாதி நிறைவு பெறும் 100-வது பாடலிலும், "குழையத் தழுவிய கொன்றையந்தார் கமழ் கொங்கைவல்லி" என்று சொல்வார்.

கன்றின் துயர் தீர்க்கும் பசுவைப்போல், நீ கரும்பு வில்லுடன் வந்து, நின்று என்னுடைய பெருந்துன்பங்களைப் போக்கி மகிழ்விப்பாயாக! வெண்ணீறணிந்து என் உள்ளத்தில் ஏற்பட்டுள்ள காயத்தை ஆற்றுவாய். (போக்குவாய்!)

## 9. வறுமையற்ற வாழ்வளிப்பாய்!

*சலம் கவர்ந்த மழைமுகில் ஆனதும்*
*சண்ட மாருதம் தாக்கியபோது தன்*
*பெலம் குலைந்தது போலே மிடியினால்*
*பிஞ்சு நெஞ்சகம் பேதகம் ஆவனோ?*
*கலங்கல் என்று வந்து ஆடகச் சூடகக்*
*கை அமர்த்திக் கருணை வந்து ஆளுவாய்!*
*அலங்கல் வேணிக்கடவூர் இறைவரை*
*ஆளும் செல்வி! அபிராம வல்லியே!*

மாலையை தன் சடையில் அணிந்த திருக்கடவூர் இறைவனை ஆளும் தேவியே! அளவிட முடியாத அபரிமிதமான அழகுடைய கொடி போன்ற அபிராமிவல்லியே!

நீர் சுமந்த கருமேகம் கூடப் புயற் காற்றால் தன் வலிமை குறைந்து கலைந்து போகும். அதுபோல் நானும் வறுமையால் மனம் கலங்கிக் கிடப்பேனோ? பொன் வளையல்கள் அணிந்த கையால் என்னை அமர்த்திக் கலங்காதே என்று சொல்லி ஆண்டருளுவாய்!

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் அன்னையை, (313) "ரமா" என்று வாக்தேவதைகள் அழைக்கிறாள். அதாவது அன்னை லக்ஷ்மீ ரூபமாயிருப்பவள்(698). ஸர்வார்த்த தாத்ரீ - ஸகல செல்வங்களையும் தருபவள்(684). ராஜராஜேஸ்வரி அனை வருக்கும் ஈஸ்வரீ. குபேரனுக்கு 'ராஜராஜன்' என்ற பெயர் உண்டு. எனவே குபேரனுக்கும் ஈஸ்வரீ(885). தனாத்யக்ஷா - செல்வத்தின் அதிபதி. குபேரன் அவளின் உபாசகர். எனவே அன்னையே "குபேரனுக்கும் குபேரன்."

மனித வாழ்வில் மிகவும் கொடிய துன்பம் - வறுமை. வறுமை நிலை ஒருவனுக்கு வந்து விட்டால் மனமும், உடலும் சோர்ந்து எந்த ஒரு செயலும் செய்ய முடியாமல் கலங்கிக் கிடக்க நேரிடும். அபிராமி அம்மை பதிகங்கள் மூன்றிலும் அடிக்கடி வறுமையைப் போக்கிட வேண்டும் என்று அன்னையிடம் வேண்டுவது, அபிராமி பட்டர் உலக மக்களின் மீது கொண்ட அக்கரையை விளக்குகிறதல்லவா!

அபிராமி பட்டர் வறுமையைச் சொல்லி, அதை நீ தான் போக்க வேண்டும் என்று சொல்லுமிடத்து, "ஆடகச் சூடகக்கை..." என்று சூசகமாக நயம்பட வேண்டுவதைக் காண்க! (ஆடகம் - பொன், சூடகம் - வளையல்)

## 10. உன்னைப் போற்றும் உபாயம் அறியேனே!

*சோகம் நல்குரவும் தவிர்த்து ஆள்கெனத்*
*தொல் புவிக்குத் துரந்தரன் ஆதியோர்*
*யோகம் என்றும் உற்று உத்தமியே! புகழ்ந்து*
*உன்னைப் போற்றும் உபாயம் அறிந்திலேன்*

*போகம் நல்கும் புணர்முலை மார்பெறப்*
*புல்லி நீங்கிப் பொறுமையினால் எனக்கு*
*ஆகம் நல்கும் கடவூர் இறைவரை*
*ஆளும் செல்வி! அபிராம வல்லியே!*

அளவிடமுடியாத அபரிமிதமான அழகுடைய கொடி போன்ற அபிராமவல்லியே! உன்னை தழுவிய மகிழ்ச்சியுடன், திருஉள்ளம் எனக்குத் தந்து அருள்புரியும் திருக்கடவூர் இறைவனை ஆளும் நாயகியே!

துன்பம், வறுமை ஆகியவற்றை நீக்கி, "எங்களை ஆண்டருள்க" என்று உலக பாரத்தை சுமக்கும் ஆதிசேஷன் முதலானவர்கள் கடுமையான யோகம் புரிந்தது போல், உத்தமியாகிய உன்னைப் போற்றும் வழி எதுவென்று நான் அறிந்து கொள்ளவில்லையே!

இத்துடன் அபிராமி அம்மை பதிகம் - III பூர்ணமாகிறது.

**வண்டுகளின் ரீங்காரம்:** திருக்கடவூர் எல்லையை நெருங்கும் போது மணங்கமழும் வானளாவிய சோலைகளில் உலவும் வண்டுகளின் ரீங்காரம் நம்மை வரவேற்கிறது. ரீங்காரம் - அன்னையின் பீஜமந்திர மான "ஹ்ரீம்". திருக்கடவூர் வரும் பக்தர்கள், அன்னையின் பீஜமந்திரத்தை சொல்லிக் கொண்டே வரவேண்டும் என்பதை ஞாபகப்படுத்துவது போல் உள்ளது. (என்னே! அன்னை அபிராமியின் கருணையுள்ளம்!)

இதை மனதில் கொண்டுதான் அபிராமி பட்டர் "வண்டார வாரம் செயும் மலர்ச்சோலை", "மன்றல் மிகு நந்தந வனங்கள் சிறை அளி முரல", "வண்டுகள் முரண்டு முகை முறுக்கு உடைந்து" என்று பதிகங்களில் சொன்னார் போலும்! திருமூலரும் (திருமந்திரம்-1073)

*"ஓங்காரீ என்பாள் அவள் ஒரு பெண்பிள்ளை*
*நீங்காத பச்சை நிறத்தையுடையவள்*
*ஆங்காரீயாகி ஐவரைப் பெற்றிட்டு*
*ரீங்காரத்துள்ளே இனிது இருந்தாளே"* என்பார்.

ஆதிசங்கரர் "ஒரே பரம்பொருள் தான் 'ஓம்' என்ற பிரம்ம வித்யா மந்திரத்தாலும், 'ஹ்ரீம்' என்ற ஸ்ரீ வித்யா மந்திரத்தாலும் கூறப்படுகிறது" என்கிறார். பிரம்ம வித்தையும், ஸ்ரீ வித்யையும் ஒன்று தான் என்கிறது சாக்த மதம்.

# கால ஸம்ஹார மூர்த்தி பதிகம்

### 1. சிவபிரான் உருவ வர்ணனை

*சுடர்மணிக்குழையும் மலர்க்கரத்து உழையும்*
*தும்பிகள் இடைஇடை நுழையும்*
*தும்பை மாலிகையும் வம்புவார் ஜடையும்*
*துண்ட வெண்பிறையும் முந்நூலும்*
*நடன பங்கயமும் கிரண கங்கணமும்*
*நங்கை பங்கு அமர்ந்த சுந்தரமும்*
*நயனம் மூன்று உடைய கோலமும் கண்டோர்*
*நமனையும் காண வல்லவரோ?*
*கொடி பலதொடுத்த நெடிய மாமணி பொற்*
*கோபுரம் பாரிடம் தொடுத்துக்*
*கொழுந்துவிட்டு எழுந்து வான்நிலவு எறிப்பக்*
*கொண்டல் வந்து உலவியே நிலவும்*
*கடிமலர்த் தடமும் சுருதி ஓதிடமும்*
*கன்னிமா மாடமும் சூழ்ந்து*
*கனவளம் சிறந்த கடவை அம்பதியாய்!*
*காலனைக் காய்ந்த தற்பரனே!*

ஒளிவீசும் மணி கொண்ட காதணியும், மலர் போன்ற மென்மையான திருக்கரத்தில் மானையும், வண்டுகள் மொய்க்கும் தும்பைப் பூமாலையும், மணம் கமழும் நீண்ட சடையும், பிறைச் சந்திரனையும், மார்பிலே மூன்று நூல்கள் சேர்ந்த பூணூலும், நடனமாடும் தாமரைத் திருவடிகளும், ஒளிவீசும் கங்கணத்தொடும், அன்னையை தனது இடது பாகத்தில் கொண்ட அழகும், மூன்று கண்களுடன் விளங்கும் திருக்கோலத்தை கண்டவர்கள் யமனைக் காண்பதற்கு அஞ்சமாட்டார்.

திருக்கடவூரில் பலவிதமான கொடிகளுடனும், முகப்பில் மாணிக்கங்கள் பதிக்கப்பெற்ற மாளிகைகள் பொற் கோபுரம்

போல் வானாவி நிற்கும். அங்கு மேகங்கள் வந்து உலாவுகின்றனவாம். மணம் கமழும் மலர்கள் நிறைந்த நீர்நிலைகளும், வேதங்கள் ஒலித்துக் கொண்டிருக்கும் வீதிகளும் கன்னிகையர்களின் பெரிய மாடங்களும் கொண்ட பெருமையுடைத்து. அதாவது நீர்வளம், நிலவளம், கார்வளம், கழனிவளம், ஸத்யவளம் இவற்றால் சிறந்து விளங்கும் அழகிய தலமாம் திருக்கடவூர். இத்தகைய பெருமை வாய்ந்த திருக்கடவூரின் அழகிய தலைவனே! காலனை ஸம்ஹாரம் செய்த பரம்பொருளே!

## 2. யம பயம் அற

*தண்டமும் கயிறும் சூலமும் புகைந்த*
*தழல் உமிழ் கண்களும் வளைந்த*
*தந்தமும் சிவந்த குஞ்சியும் கரிய*
*சயிலமே அனைய மேனியுமாய்*
*அண்டிய சமனைக் கண்டுள(ம்) மயங்கி*
*அறிவு அழிந்து இருவிழிகளும் பஞ்சு*
*அடைந்து வாய் புலர்ந்து மெய் மறந்திடும்போது*
*அம்பிகை தன்னுடன் வருவாய்!*
*வண்டுகள் முரன்று முகை முறுக்கு உடைந்து*
*மது மழை பொழிந்து தாது அளைந்து*
*மடல் விரிந்து அலர்ந்து பொன்நிறம் பொதிந்த*
*மன்றல் அம் கொன்றைவார் சடையாய்!*
*கண்டவர் உளமும் கண்ணுமே கவரும்*
*கனதன வனிதையர் நெருங்கும்*
*கனவளம் சிறந்த கடவை அம்பதியாய்!*
*காலனைக் காய்ந்த தற்பரனே!*

கைகளிலே தண்டாயுதமும், பாசக் கயிறும், சூலமும் கொண்டு, நெருப்பை கக்கும் கண்களும், வளைந்த பற்களும், சிவந்த முடியும், கரிய மலைக்கு நிகரான திருமேனியுடன் யமன் என்னை நோக்கி வரும்பொழுது, என் உள்ளம் மயக்கமடையும். அறிவும் அழிந்து விடும். இருகண்களும் பஞ்சுபோல் நிலையற்று போய் விடும். வாயும் உலர்ந்து விடும். உடலை விட்டு உயிர் பிரியும் சமயத்தில், நீ அன்னையுடன் வந்து அருள வேண்டும்.

வண்டுகள் மலரும் தறுவாயில் வந்து மொய்ப்பதால் மொட்டுடைந்து தேனுடன் பூந்தாதுக்கள் கலந்து, பொன்னிறத்

துடன் விளங்கும் கொன்றை பூக்களை அணிந்த நீண்ட சடையுடையவனே!

பார்ப்பவர்களின் உள்ளத்தையும், கண்களையும் கவரும் கனத்த தனங்களையுடைய பெண்களும் மிகுந்த பெருமை வளம் கொண்டு சிறப்பு வாய்ந்ததுமான திருக்கடவூரின் அழகிய தலைவனே! காலனை ஸம்ஹாரம் செய்த பரம் பொருளே!

### 3. சிவன் அருள் மகிமை

*தனபதி நிகராய்ச் செல்வமே பெறினும்*
*சதமகன் போகமே பெறினும்*
*தாரணி சுமக்கும் சேடனே நிகராய்த்*
*தக்கதோர் அறிவு எலாம் பெறினும்*
*அனங்கனை நிகராய் அழகுதான் பெறினும்*
*அருமறைக் கிழவன் நேர் உறினும்*
*ஐய! நின் கடைக்கண் அருள்தவறிய பேர்*
*அம்கை ஓடு ஏந்தி நின்று உழல்வார்!*
*பனக கங்கணத்தாய்! அளப்பரும் குணத்தாய்!*
*பார்வதி வாம பாகத்தாய்!*
*பவள நல்நிறத்தாய்! தவள தூளிதத்தாய்!*
*பரிபுரம் அலம்பு பொற் பதத்தாய்!*
*கனகமும் துகிரும் தரளமும் வயிரக்*
*கலன்களும் நிலம்தொறு(ம்) மிடைந்த*
*கனவளம் சிறந்த கடவை அம்பதியாய்!*
*காலனைக் காய்ந்த தற்பரனே!*

செல்வத்திற்கெல்லாம் அதிபதியான குபேரன் போன்று செல்வம் இருந்தாலும், இந்திரன் போன்று இன்பங்கள் அனுபவித்தாலும், இப்பூமியை தாங்கும் ஆதிசேடன் போன்று அறிவு பெற்றாலும், மன்மதனைப் போல அழகாய் இருப்பினும், வேதங்களை ஓதும் பிரமன் எனும் உரிமை உண்டானாலும், உன்னுடைய கடைக்கண் பார்வை அருள் பெறாதவர்கள் அழகிய கையில் ஓடு ஏந்தி பிச்சை எடுத்து திரிவர்.

நாக கங்கணத்தையுடையவனே, சொல்லற்கரிய கல்யாண குணங்களை கொண்டவனே! பார்வதி தேவியை இடப்பாகத்தில்

உடையவனே! பவளம் போன்ற சிவந்த திருமேனியுடைவனே! வெண்ணிற சாம்பலை தன் உடலில் தரித்தவனே! சிலம்புகள் ஒலிக்கும் பொற்பாதங்களைக் கொண்டவனே!

பொன்னும், பவளமும், முத்துக்களும், வயிர அணிகளும் எங்கும் நிறைந்து இயற்கைவளம் மிகுந்து, பெருமை மிக்க வளமும் சிறந்த திருக்கடவூரின் அழகிய தலைவனே! காலனை ஸம்ஹாரம் செய்த பரம்பொருளே!

### 4. ஸம்ஸார துக்கம் அற

*தந்தையை மனையை ஒக்கலைத் துணையைத்*
*தாயை மென்குதலைவாய்ச் சேயைத்*
*தனத்தை யௌவனத்தை இன்ப மோஹனத்தைத்*
*தையல் நல்லார் பெருந் தனத்தை*
*அந்தியும் பகலும் விரும்பி மெய்சோம்பி*
*ஆழ் கடற் படுதுரும்பு ஆகி*
*அலக் கழிந்தேனைப் புலப்படத் திருத்தி*
*ஆட்கொள நினைத்திலாய்! அன்றோ?*
*சிந்தை நைந்துருக இன்னிசை படித்துச்*
*சிலம்பு ஒலி ஆரவே நடித்துச்*
*செழும் புனல்சடைமேல் கரந்தையை முடித்துத்*
*திருவெணீறு உடல்எலாம் வடித்துக்*
*கந்தை கோவணம் தோல் பொக்கணம் தாங்கிக்*
*கபாலம் ஒன்று ஏந்தி நின்றவனே!*
*கனவளம் சிறந்த கடவை அம்பதியாய்!*
*காலனைக் காய்ந்த தற்பரனே!*

தந்தை, தாய், தாரம், உற்றார், உறவினர், மழலை மொழி பேசும் குழந்தைகள், செல்வங்கள், யௌவனம், இன்பம் என்று நினைக்கும் மன மயக்கம், பெண்கள் மீது ஆசைகொண்டு, அவர்கள் தனங்களில் பிரியப்பட்டு காமஇச்சையில் ஈடுபட்டு உடல்வருத்தி, ஆழ்ந்த கடலில் நுண்ணிய துரும்புபோல் ஆகி அவஸ்தை படும் அடியேனை தெளிய வைத்து, மாற்றியமைத்து ஆட்கொள்ள உள்ளம் கொள்ளவில்லை அன்றோ! (என்னை உடனே ஆட்கொள்வாயாக!)

உள்ளம் நெகிழ்ந்து உருக இனிய இன்னிசை பாடி சிலம்பொலி நிறைந்து நடனமாடி, கங்கையை சடைமேல் தாங்கி, கரந்தை மலர் அணிந்து, உடல் முழுவதும் விபூதி பூசி, இடையிலே எளிய கோவணத்துடன் புலித்தோல் முடிச்சும் கொண்டு, கையிலே மண்டையோடு ஒன்று ஏந்தி நிற்பவனே!

பெருமை மிக்க வளம் சிறந்த திருக்கடவூரின் அழகிய தலைவனே! காலனை ஸம்ஹாரம் செய்த பரம்பொருளே!

### 5. தன் சிறுமை கூறல்

*வஞ்சகக் கிணறாய் துன்ப வாரிதியாய்*
*வறுமை என்பதற்கு இருப்பிடமாய்*
*மறம் பொதிகுடிலாய் அசத்திய விதையாய்*
*மயல்விளை கழனியாய்ப் பாவ*
*சஞ்சித வடிவாய்ச் சருச்சரைப் புரமாய்*
*சங்கட நோய்க் களஞ்சியமாய்த்*
*தலை தடுமாறித்திரியும் என் தனக்கு உன்*
*தண் அளிகிடைக்குமோ? அறியேன்!*
*நஞ்சம் உண்பகுவாய்ச் சுடிகைமுள் எயிற்று*
*நகை மணிப் பாந்தள் அம்சூழ்ந்த*
*நளிர் இளம் பிறையும் மிளிர் செழுஞ் சடையாய்!*
*நங்கையர் முழுமதி முகத்தைக்*
*கஞ்சமென் மலர்கள் கண்டுவாய் ஒடுங்கும்*
*கந்தம் உந்திய தடம் சூழும்*
*கனவளம் சிறந்த கடவை அம்பதியாய்!*
*காலனைக் காய்ந்த தற்பரனே!*

வஞ்சகமே ஊற்று எடுக்கிற கிணறாய், துன்பத்தின் கடலாய், வறுமை என்பதற்கு இடமாய், பாவம் நிறைந்த இவ்வுடலில் (குடில்) பொய்யாகிற விதையாய், மயக்கம் தருகின்ற இருவினைகள் பெருகி வளரும் வயலாய், சேர்த்து வைத்த தீவினைகளின் வடிவாய், ஒப்புரவு (சந்தோஷம், இரங்கல், உபகாரம் போன்று) இல்லாத் தன்மையுடைய இடமாய், எல்லாவித நோய்களும் இருக்கும் களஞ்சியமாய் தலை சுழன்று, நிலையில்லாது திரியும் எனக்கு உன் குளிர்ச்சியான அருள் எப்போது கிடைக்கும்! நான் அறியேன்! (நீயே அறிவாய்!)

விஷம் உள்ள பிளந்த வாயில் முள் போன்ற கூர்மையான பற்களுடன், ஒளிவீசும் மாணிக்கத்தை தன்னிடம் கொண்ட பாம்பையும், குளிர்ச்சியான பிறைச் சந்திரனையும் தாங்கிய ஒளி வீசும் சிவந்த சடையோனே!

பெண்களின் முகத்தை முழுச்சந்திரனாக நினைத்து, மென்மையான தாமரைகள் தங்கள் இதழ்களை மூடிக் கொள்கின்றனவாம். (தாமரை இதழ்கள் பகலில் விரிந்து இரவில் குவியும் தன்மையுடையது). இவ்வாறு தாமரைகள் நிறைந்த மணம் கொண்ட நீர்நிலைகள் சூழ்ந்து பெருமை மிக்க வளம் சிறந்த திருக்கடவூரின் அழகிய தலைவனே! காலனை ஸம்ஹாரம் செய்த பரம்பொருள்!

### 6. பிறவா நிலை வேண்டுதல்

*பிரமனும் சலிக்கத் தாயர் சஞ்சலிக்கப்*
*பேதையர் கண்டு அசங்கதிக்கப்*
*பிணிகளும் பகைக்க மூப்பு வந்து அலைக்கப்*
*பின் தொடர்ந்து ஆசை சென்று இழுக்கத்*
*தருமனும் வெறுக்க நரகமும் ஒறுக்கத்*
*தாரணி சுமந்து நொந்து இளைக்கச்*
*சகடு எனச் சுழலும் கறங்கு எனக் கொடிய*
*சடலமே எடுக்க நான் இலக்கோ?*
*குருமணி இமைக்கும் புதுமலர்த் தடத்தில்*
*கோட்டிளம் மோட்டு மாமேதிக்*
*குலங்கள் போய் படிந்து நலம் கிளர் செழும்தேன்*
*குவளை மென்று உழக்கிய தோற்றம்*
*கரிய மாகடலில் புகுந்து நீர் அருந்தும்*
*காள மேகங்களோ எனலாய்க்*
*கனவளம் சிறந்த கடவை அம்பதியாய்*
*காலனைக் காய்ந்த தற்பரனே!*

படைப்புத் தொழிலைச் செய்யும் பிரமன் மீண்டும் மீண்டும் படைத்ததினால் சோர்ந்து விட்டான். தாய்மார்களும் திரும்பத் திரும்ப பிள்ளைகளைப் பெற்று துன்பம் அடைந்தனர். பெண்களும் பிறவியைக் கண்டு நடுக்கம் கொண்டனர். வியாதிகள் வந்து தீங்கு செய்கின்றன. முதுமையும் வந்து

வருத்தம் தருகிறது. ஆனாலும் ஆசைகள் தொடர்ந்து இழுக்கின்றன. யமனும் வெறுக்கிறான். நரகமும் வெறுக்கிறது. பூமியும் பாரத்தைச் சுமந்து வருந்தி இளைக்கிறது. (அதாவது இனி பிறவியே வேண்டாம்!)

நிறம் மிகுந்து ஒளிவீசுகின்ற மாணிக்கம் போல் மலர்கின்ற புதிய மலர்கள் நிறைந்த தடாகத்தில், இளமையுடன் பெருத்த வயிறு உடைய எருமைக்கூட்டங்கள் நீரில் சென்று, நலம் தரும் தேன் கொண்ட குவளை மலர்களை மென்று சுவைத்து தண்ணீரைக் கலக்கிய காட்சி நீலநிறமான பெரிய கடலில் புகுந்து நீரை ஆவியாக உண்ணும் கரிய மேகங்கள் போன்று உளதாம்! என்னே! அபிராமி பட்டரின் கவிநயமும், வளமும்!

இவ்வாறு பெருமை மிக்க வளம் சிறந்த திருக்கடவூரின் அழகிய தலைவனே! காலனை ஸம்ஹாரம் செய்த பரம்பொருளே!

## 7. லோபியைப் புகழாதே!

*மறுகு வெம்சினத்தர் தெறும் அவகுணத்தர்*
*வஞ்சகம் பொதிந்த நெஞ்சகத்தர்*
*வழக்கம் ஒன்று இல்லாப் பழக்கரும் மூடர்*
*மதிஇலாப் பதிதர் பால் அணுகிப்*
*பொறுமையில் தருமன் நெறியினில் சேடன்*
*புலமையில் குறிய மாமுனிவன்*
*புரந்தரன் எனவும் நிரந்தரம் புகழ்ந்து*
*பொழுது அவம் போக்கினேன்; அந்தோ!*
*வெறிமலர்ப் பிரசம் சொரிந்து வண்டு இனங்கள்*
*மிடைந்து மாமுகிலினைக் கிழித்து*
*மேல் இடத்து இரவிப்பசும் புரவிகளாய்*
*விளங்கியே விண்தல முகட்டைக்*
*கழுவி நின்று ஓங்கிச் செறியும் ஐந்தருவுள்*
*கற்பகத் தருவினை ஒப்பாய்!*
*கனவளம் சிறந்த கடவை அம்பதியாய்!*
*காலனைக் காய்ந்த தற்பரனே!*

கோபத்தினால் மனம் குமுறும் தீய குணமுடையவரையும், சூழ்ச்சி நிறைந்த மனம் கொண்டவரையும், நற்குணங்கள் கொண்டு பிறருடன் பழக்கமில்லாத, பழகுவதற்கு தகுதியற்ற

மூடரையும், அறிவில்லாத பாவிகளிடமும் சென்று, பொறுமைக்கு இலக்கணமாய் திகழும் தருமன் (பஞ்சபாண்டவர் களில் மூத்தவன்) என்றும், ஒழுக்கத்தில் இப்பூமியைத் தாங்கும் ஆதிசேடன் என்றும், புலமைக்கு எடுத்துக் காட்டாய் விளங்கும் அகஸ்திய மாமுனிவன் என்றும், போகத்தின் உச்சியில் நிற்கும் தேவேந்திரன் என்றும் எப்போதும் புகழ்ந்து காலத்தை வீணாக்கி விட்டேனே! அந்தோ!

மணம் மிக்க மலர்கள் தேனைச் சொறிவதனால் வண்டு இனம் நிறைந்து, மேகக் கூட்டங்களைக் கிழித்து, சூரியனின் பசுமையான குதிரைகளாய் விளங்குகிறதாம். வான மண்டலத்தின் உச்சியை சினத்தால் பார்த்து, அதற்கு ஏற்ப ஓங்கி வளர்ந்த ஐந்து மரங்களில் கற்பகத்தருவிற்கு நிகராய் விளங்கும் பெருமை மிக்க வளம் சிறந்த திருக்கடவூரின் அழகிய தலைவனே! காலனை ஸம்ஹாரம் செய்த பரம்பொருளே!

(தருக்கள் - ஐந்து - 1. கற்பகம் 2. அரிசந்தாம் 3. சந்தனம் 4. பாரிசாதம் 5. மந்தாரம் இதில் கற்பகத்தருவின் சிறப்பு என்ன வென்றால் - அதன் அடியில் அமர்ந்திருப்பவன் நினைத்ததை உடனே தருவது)

### 8. அவன் அருளால் அவன்தாள் வணங்கி

*நெஞ்சகம் குழைந்து பணிவிடைக்கு இசைந்து*
*நீறொடு கண்டிகை புனைந்து*
*நிலவு பொற்கோயில் அதைவலம் புரிந்து*
*நெகிழும் முன்நாள் மலர் எடுத்து*
*வஞ்சமா மயக்கில் மயங்கும் ஐம்புலனாம்*
*மாற்றலர் வலிமையைக் கவர்ந்து உன்*
*மலர்ப்பதத்து இருத்தி அலக்கணைத் துரத்தி*
*மதிமிகு வாழ்வளித்திடும் "ஓம்*
*ஜூம் ஸ:" எனும் நல் தூயமூன்று எழுத்தை*
*சுகிர்தமாய்க் கொண்டு அருச்சனை செய்*
*தொண்டர்கள் உறவைக் கொண்டுனைப் பணியச்*
*சுணக்கனாம் எனக்கு அருள் புரிவாய்!*
*கஞ்சமென் மலர்மீது அஞ்சம் மெய் பசக்கக்*
*கார் மயில் ஒகரமாய் நடிக்கும்*

*கனவளம் சிறந்த கடவை அம்பதியாய்!*
*காலனைக் காய்ந்த தற்பரனே!*

தாமரை மலர்களின் மீது களிப்புடன் வீற்றிருக்கும் அன்னப் பறவைகளும், மேகங்களைக் கண்டு மகிழ்வுடன் ஓங்கார வடிவமாய் தோகை விரித்தாடும் மயில்களும் நிறைந்த இயற்கை வளம் சிறந்த திருக்கடவூரின் அழகிய தலைவனே! காலனை ஸம்ஹாரம் செய்த பரம்பொருளே!

உள்மனம் உருகி உனக்கு பணிவிடைகள் செய்ய மனம் ஒன்றி, நெற்றியில் திருநீறு இட்டு, கழுத்தினிலே உருத்திராக்க மணிமாலை அணிந்து, உன் பொற்கோயிலை சுற்றி வலம் வந்து, பூசைக்குரிய மலர்களைப் பறித்து, மாயையான இவ்வாழ்வின் மயங்க வைக்கும் பகைவர்களான ஐம்புலன்களை வென்று, உனது திருவடிகளில் இருந்து கொண்டு, அல்லல்களை அழித்து உயரிய, உன்னத வாழ்வு அளித்திடும், "ஓம் ஜூம் ஸ:" என்ற மூன்று எழுத்து மிருத்யுஞ்சய மந்திரத்தை நல்வழியாய் கொண்டு அர்ச்சனை செய்யும் உன் அடியார்களின் சத்சங்கத்திலே என்னைச் சேர்த்து, உன்னைப் பணிய, நாயேனான எனக்கு அருள்புரிவாய்!

ஐம்புலன்களின் வழியே செல்லாமல் மனத்தை ஒருமுகமாக ஆண்டவனிடம் நிறுத்துவதே பக்தியின் முதற்படியாகும். இங்கு ஐம்புலன்களை - மாற்றலர் - பகைவர் என்று அபிராமிபட்டர் அனுபவபூர்வமாகக் கூறுவதை உணர வேண்டும். மாணிக்க வாசகரும், "மலங்கப் புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்ய" என்று சிவபுராணத்தில் கூறுவர். "ஓம் ஜூம் ஸ:" என்பது மிருத்யுஞ்சய த்ரயக்ஷரீ எனப்படும். ம்ருத்யு: மரணம், சயம்-வெற்றி. மரணத்தை வெல்லும் மந்திரம். திருக்கடவூர் "கால ஸம்ஹார க்ஷேத்ரம்".

## 9. மாதர் மயக்கம் மறக்க

*மைக்கயல் விழியால் மயக்கி உள்உருக்கி*
*மஞ்சளால் முகத்தினை மினுக்கி*
*மணிநகை பெருக்கி ஆசை உண்டாக்கி*
*வளர் இள முலைத் துகில் இறுக்கிப்*

*பக்கல் வந்து அமர்ந்து மென்மொழி பகர்ந்து*
*பரவசம் போல மேல் விழுந்து*
*படி(று) உளம் உணர்ந்தே அசத்தியம் உரைத்துப்*
*பறித்திடக் குறித்த பாவையர்க் காய்த்*
*துக்க சாகரத்தில் அழுந்தி நாள்தோறும்*
*தோதப்பட்ட பாதகனைத்*
*துய்ய செங்கமலச் செய்யதாள் இணைக்கே*
*தொண்டு கொண்டால் குறை உறுமோ?*
*கைக் கழங்காடும் திறத்தினை நிகராய்*
*கமலமென் மலர்மிசை அறுகாற்*
*களிப்பளி சுழலும் கடவை அம்பதியாய்!*
*காலனைக் காய்ந்த தற்பரனே!*

தங்களுடைய மை தீட்டிய கண்களால் மயக்கி, உள்ளத்தை உருக்கி, மஞ்சள் பூசிய முகத்தினால் ஜொலித்து, அணிகலன் களை அணிந்து ஆசையை உண்டாக்கி, வனப்பு மிகு இளமையுடன் விளங்கும் மார்பகங்களை மேலாடையினால் இறுக்கமாக்கி, பக்கத்தில் வந்து உட்கார்ந்து, இனிமையான சொற்களைப் பேசி, வஞ்சனையுடன் உள்ளம் கவர்ந்து, மிகுந்த களிப்புடன் மேல் விழுந்து, பொய்களைச் சொல்லி, பிறரைக் கவருவதையே குறிக்கோளாகக் கொண்ட அழகிய பெண்களின் மயக்கத்தினால், துன்பக் கடலில் மூழ்கி நாள்தோறும் வருந்திய இந்தப் பாவி, தூய்மையான சிவந்த தாமரை மலர் போன்ற உனது சிவந்த திருவடிகளுக்கு தொண்டு செய்தால் குறைகள் ஏதும் உண்டாகுமோ?

மங்கையர்கள் தங்கள் கைகளினால் வீசியாடும் கழங்கு காய் ஆட்டம்போல், மென்மையான சிவந்த தாமரை மலர் மீது தேன் உண்டு களிப்படைந்து சுழலும் வண்டுகள் நிறைந்த, இயற்கை வளம் மிகு திருக்கடவூரின் அழகிய தலைவனே! காலனை சம்ஹாரம் செய்த பரம்பொருளே!

அபிராமி பட்டர் ஒரு தலைசிறந்த மகான், "பாவையரிடம் மயங்கி துன்பக்கடலில் மூழ்கி விட்டேனே!" - என்று அவர் வருந்துவது, உலகில் உள்ள தரம் குறைந்த சில மனிதர்களுக் காக அவர் இறைவனிடம் பிரார்த்தனை செய்வதைக் குறிக்கிறது.

லோக க்ஷேமம் தான் துறவிகளுக்கும், ஞானிகளுக்கும், தவசிகளுக்கும் குறிக்கோளாய் இருக்க வேண்டும் என்பதற்கு அவர் வழிகாட்டியாய் இருக்கிறார்.

## 10. ஆத்ம ஸமர்ப்பணம்

*செயல் பணிவிடையாய்ச் செப்பல் ஐந்தெழுத்தாய்த்*
*திரிதலே வலம் புரிதலுமாய்ச்*
*சிந்தையின் நினைவே தியானமாய், உண்டு*
*தெவிட்டல் நிவேதனச் சிறப்பாய்த்*
*துயிறல் வந்தனையாய்த் திருவுளத்(து) உவந்து*
*துள்ளு வெள் விடை மேல் ஏறித்*
*தொண்டரும் விசும்பில் அண்டரும் காணத்*
*தோகையோடு எனக்குவந்து அருள்வாய்!*
*வயல்வரம்பு உறைந்த கடைசியர் முகத்தை*
*மதியம் என்று அதிசயம் மிகுந்து*
*வரும்பகல் இடத்தும் இரவினும் குவளை*
*வாய் ஒடுங்காமலே விளங்கும்*
*கயல் நெடுந் தடமும் கமுகமும் கமுகைக்*
*காட்டிய கன்னலும் பொதிந்த*
*கனவளம் சிறந்த கடவை அம்பதியாய்!*
*காலனைக் காய்ந்த தற்பரனே!*

அடியேன் செய்யும் செயல்கள் யாவும் உன் பணிவிடை களாகவும், பேசுவதெல்லாம் ஐந்தெழுத்து மந்திரமான, "ஓம் நமசிவாய" என்பதை ஓதுவதாகவும், வெறும் நடையெல்லாம் பிரதட்சிணமாகவும், சிந்தையில் தோன்றுவதெல்லாம் த்யானமாகவும, உண்டு உமிழ்வதெல்லாம் உனக்கு உகந்த நைவேத்யமாகவும், படுத்து உறங்குதல் உனக்கு நமஸ்கார மாகவும் உன்னுடைய திருவுள்ளத்தில் மகிழ்ச்சியுடன் ஏற்று, உன்னுடைய அடியார்களும், வானத்தவரும் காண அன்னை யுடன் வெள்ளைக் காளை மீது ஏறி வந்து எனக்கு அருள் புரிவாய்!

வயல், வரம்புகளில் வேலை செய்யும் மருத நிலத்துப் பெண்களின் முகப்பிரகாசத்தைக் கண்டு பகல் என்று கருதி மலராத குவளைப் பூக்களும், மீன்கள் நிறைந்த பொய்கைகளும், பாக்கு மரங்களும், அப்பாக்கு மரங்களுக்கொப்பாக விளைந்த கரும்புப் பயிர்களும் கொண்டு இயற்கை வளம் சிறந்த

திருக்கடவூரின் அழகிய தலைவனே! காலனை சம்ஹாரம் செய்த பரம்பொருளே!

அபிராமி பட்டர், "கள்ள விநாயகர் பதிகத்திலும்(2) அபிராமி அந்தாதிலும் - "நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்தும் நினைப்பது உன்னை" (10) இதே கருத்தினை வலியுறுத்துகிறார். அதாவது, அல்லும் பகலும் நாம் என்ன செய்தாலும் நம் நினைப்பு அந்தப் பரம்பொருளில் பதிய வேண்டும். ஆதி சங்கரரும் ('ஜபோ ஜல்ப' - ஸௌந்தர்யலஹரீ-27), தாயுமானவரும் இதைத் தான் உலகிற்கு உணர்த்துகிறார்கள். (முன்னும் பார்த்தோம்)

இப்பாடலில், "உண்டு தெவிட்டல்" - உண்டு உமிழ்வது - என்று வருவது நமக்கு கண்ணப்ப நாயனார் சரித்திரத்தை நினைப்பூட்டுகிறது.

அபிராமி பட்டர் - "என் முன் வந்து காட்சிதருக" என்று வேண்டும்போதெல்லாம் - அத்தனையும், அன்னையையும், சேர்த்தே சொல்வது - அவர் சிவனையும், சக்தியையும் சமபாவத்தில் வழிபட வேண்டும் என்ற அரிய கருத்தினை உலகோர்க்கு உணர்த்துகிறார். (சம பாவம் = ஸாமரஸ்யம்)

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில்(999) சிவ சக்த்யைக்ய ரூபிணீ - சிவனும், சக்தியும் ஒன்றாக இருப்பவள்.

ஆதிசங்கரர் ஸௌந்தர்யலஹரீயின் 100-வது ஸ்லோகத்தில் (ப்ரதீப-ஜ்வாலாபிர்:) அன்னையிடம்,

(த்வதீயாபி:) உன்னுடையதேயான (வாக்பி:)வாக்குகளால் - அமைந்த (இயம்)இந்த (தவ)உனது (ஸ்துதி:)ஸ்தோத்திரம், என்று மிகுந்த தன்னடக்கத்துடன் சொல்லி நிறைவு செய்கிறார்.

ஆதிசங்கரரே இப்படி சொல்கிறார் என்றால், கீடத்திற்கும் கீழே கிடக்கும் அடியேன் என் சொல்வது? அம்மா அபிராமி! எல்லாம் உன் செயல்! நான் உன் அடிமை. இது சத்தியம்.

அபிராமி பட்டர் அபிராமி அந்தாதியிலும், பதிகங்களிலும் அன்னையை தாயாகக் கண்டு, தன்னை சேயாகக் கொண்டவர். இது தான் அவர் உலகோர்க்கு உணர்த்தும் உன்னதமான பாடம்.

வாழ்க அபிராமி பட்டர்! வாழ்க அன்னை அபிராமி அருள்! ஸதா அபிராமீம் சரணம் ப்ரபத்யே!

**சுபமஸ்து**

## ஸரபோஜி மன்னன் அபிராமி பட்டருக்குக் களமான்யமாக அளித்த நெல் விபரம் தெரிவிக்கும் செப்புப் பட்டயத்தின் பாடற் ப்ரதி

*சீர்பெறு ஸகாப்தம்ஓர் ஆயிரத் தறுநூறு*
*சேரு(ம்)முப் பான் ஒன்றின் மேல்*
*திகழ்தரு விரோதிவரு ஷத்தினிற் சித்திரைத்*
*திங்கள்பதி னேழ்திகதி யில்*

*பார்புகழ் வியாழன்நாள் துதியைஅது ஷம்பூர்வ*
*பக்ஷநல் ஶுபதிநத் தில்*
*பஞ்சலட் சணவர்அபி ராமிபட் டர்க்கரசர்*
*பட்டோலை இட்ட விபரம்*

*கார்பரவு கடவைநாற் பதுகலம் பதினாறு*
*கணித(ம்)மு வைந்தொர் ஆக்கூர்*
*கவின்நாற் பதின்கலம்ஓர் நல்லாடை திருவிடைக்*
*கழிகலம் பதினைந்து மாம்*

*ஏர்பெருகு செம்பொன்செய் பள்ளிஇரு பான்கலம்*
*எனப்போஜ மஹராஜர் போன்ம்*
*எங்கள்ஸர போஜிமனன் மகமையுடன் விபரமாய்*
*எந்நாளும் அருளும் வகையே.*

ஆதாரம் : "திருக்கடவூர்ப் ப்ரபந்தத் திரட்டு"

